# புவனேசுவரி பிரபந்தத் திரட்டு

சுவடியியலும் பதிப்பியலும் பட்டயப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் பதிப்பேடு



ஆய்வாளர்
தே. தேன்மொழி, எம்.ஏ., எம். ஃபில்.,



தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை-5

ஜூலை - 2011

# புவனேசுவரி பிரபந்தத் திரட்டு

சுவடியியலும் பதிப்பியலும் பட்டயப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் பதிப்பேடு

ஆய்வாளர்
**தே. தேன்மொழி**, எம்.ஏ., எம்.ஃபில்.,

நெறியாளர்
முனைவர் **ய. மணிகண்டன்**
உதவிப்பேராசிரியர்



**தமிழ் இலக்கியத்துறை**
**சென்னைப் பல்கலைக்கழகம்**
**சென்னை-5**

**ஜூலை - 2011**

**முனைவர் ய. மணிகண்டன்**
உதவிப்பேராசிரியர்,
தமிழ் இலக்கியத்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 600 005.

# நெறியாளர் சான்றிதழ்

**'புவனேசுவரி பிரபந்தத் திரட்டு'** எனும் தலைப்பிலான ஓலைச்சுவடியைச் **'சுவடியியலும் பதிப்பியலும்'** எனும் பட்டயம் பெறுவதற்காக **தே. தேன்மொழி** அவர்கள் என் மேற்பார்வையில் பதிப்பு செய்தார் என்றும் இப்பதிப்பு இவர்தம் தனி முயற்சியில் உருவானது என்றும் சான்றளிக்கிறேன்.

நெறியாளர்

**(முனைவர் ய. மணிகண்டன்)**

**நாள்:**
**இடம்: சென்னை - 5.**

**தே. தேன்மொழி,** எம்.ஏ., எம். ஃபில்.,
ஆய்வாளர்
தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை - 600 005.

# ஆய்வாளர் உறுதிமொழி

'சுவடியியலும் பதிப்பியலும்' என்னும் பட்டயப் பேற்றிற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் **'புவனேசுவரி பிரபந்தத் திரட்டு'** எனும் தலைப்பிலான ஆய்வேடு என் தனி முயற்சியில் உருவானது என்று உறுதியளிக்கிறேன்.

ஆய்வாளர்

**(தே. தேன்மொழி)**

நாள்:
இடம்: சென்னை - 5.

# நன்றியுரை

எப்போதும் என் நிழலாய் எனக்குத் துணையாய் இருந்து வழிநடத்தும் அன்னைக்கு என் பணிவான நன்றி. சுவடியியலை எனக்கு அறிமுகப்படுத்திய செம்மொழி நிறுவனத்திற்கும் சுவடியியல் மீது ஆர்வத்தைத் தூண்டிய உ.வே.சா நூல்நிலைய காப்பாட்சியர் பசுபதி அவர்களுக்கும் என் உள்ளங்கனிந்த நன்றி. இப்பட்டயப்படிப்பிற்கு ஊக்கமளித்த இராணிமேரி கல்லூரி இணைப்பேராசிரியை முனைவர் அ. இராசேசுவரி அவர்களுக்கு நன்றி.

பட்டயப் படிப்பிற்கு அனுமதி அளித்து வழிகாட்டிய சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறைத் தலைவர் முனைவர் வீ.அரசு அவர்களுக்கும் சுவடியியல், யாப்பு கற்பித்த முனைவர் ய.மணிகண்டன், ஆசிரியை லதா அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. பட்டயப் படிப்பின் ஒரு பகுதியாகிய சுவடிப்பதிப்பிற்காக சுவடியைத் தேர்வு செய்யவும், ஓலைச்சுவடி, தாள்சுவடியைப் பார்ப்பதற்கும் ஒளிநகல் எடுப்பதற்கும், எழுதுவதற்கும் அனுமதி அளித்து உதவிய சென்னைப் பல்கலைக்கழக அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகக் காப்பாளருக்கும் பிற ஊழியர்களுக்கும் நன்றி! சுவடித் தேடலில் உற்ற துணையாய் இருந்த நண்பர் கா. இரமேஷ் அவர்களுக்கும், ஊக்கமளித்த என் குடும்பத்தாருக்கும் மனமுவந்த நன்றி. இந்நூலை சிறந்த முறையில் தட்டச்சு செய்து நூல் உருவாக்கம் செய்த **அன்னை வரைகலை** அ. சுபாஷ் அவர்களுக்கு மனமார்ந்த நன்றி.

**தே. தேன்மொழி**
ஆய்வாயளர்

# பொருளடக்கம்

# பதிப்புரை

மக்களின் உள்ளுணர்வின் உந்துதலால் உண்டாகும் உணர்ச்சிகளால் ஏற்படும் ஒலித்திரள்களின் கூட்டமே சொற்களாக-உரைகளாகத் தனிநிலைப் பாடல்களாக வடிவு எடுக்கின்றன. அவர்தம் இன்ப துன்பங்களின் சாயல்கள் அவற்றில் படிகின்றன. அத்தகைய மக்களின் வாழ்க்கை முறை நம்பிக்கையின் அடிப்படையில் பிறந்ததாகும். பழங்காலம் முதல் இன்றுவரை மக்களிடம் நம்பிக்கைகள் வேரூன்றியுள்ளன. தங்கள் வாழ்க்கை ஓட்டத்திற்கு நம்பிக்கையை துணையாக வைத்துக் கொண்டு செயல்படுகின்றனர். அத்தகைய நம்பிக்கைகளில் முதன்மையானது தெய்வ நம்பிக்கை.

உலகில் எல்லாவற்றையும் கடந்த ஓர் செயல் இயற்கையாக நிகழ்கிறது. இயற்கையின் வெளிப்பாடுகளையும் அற்புதங் களையும் அபூர்வ சக்தியாக எண்ணி அதனை தெய்வமாக மனதில் ஏற்று அதன்மீது அளவுகடந்த நம்பிக்கை கொண்டு போற்றிப் புகழ்ந்தும் வழிபடுகின்றனர். தங்களால் இயலாத காரியங்களை தெய்வ நம்பிக்கைத் துணைகொண்டு நிறைவேற்றுகிறார்கள். அந்த நம்பிக்கையின் மூலம் செயல்கள் வெற்றி பெருகின்றன. செயலின் தொடக்கத்தில் தெய்வத்தை வணங்கி நன்றி தெரிவித்துப் பின் செயலைத் தொடங்குகிறார்கள். ஏனெனில் செயல் தடைபடாமல் நிறைவேற தெய்வத்துணை வேண்டும் என்ற நம்பிக்கை கொண்டு வாழ்ந்தனர். மக்கள் தங்களுக்கு நோயோ அல்லது பிறவற்றால் துன்பங்கள் வந்தாலும் தெய்வத்தை வணங்கி, வழிபாடு செய்து அதனை போக்கும் பழக்கத்தினை கொண்டுள்ளனர். தங்களின் நம்பிக்கையைச் சடங்கு சம்பிர தாயங்களைப் பழக்கவழக்கங்களாகக் கொண்டுள்ளனர். இத்தகைய

நம்பிக்கை வயப்பட்ட பழக்கவழக்கங்கள் தமிழர்களின் இரத்தத்தில் ஊறிப்போன ஒன்றாகத் திகழ்கிறது.

இதுமட்டும் அல்லாமல் நம்பிக்கையானது, தன்னம்பிக்கை, பிறர் நம்பிக்கை என்ற இரண்டு நிலையில் இயங்குகின்றது. தன்னம்பிக்கை என்பது தன் வாழ்வில் நடந்த சிற்சில செயல்பாடுகளை முன்நிறுத்தித் தனக்குத்தானே உற்சாகமாகிக் கொள்வது. பிறர் நம்பிக்கை என்பது தனது மூதாதையர்களின் வாழ்க்கையிலிருந்தும், தனது சம காலத்தவர்களின் வாழ்க்கையிலிருந்தும் சொற்களிலிருந்தும் பெற்றுக்கொண்டு இயங்குவதாகும்.

மக்கள் தங்கள் மூதாதையர்களை வணங்குதற்குரிய வடிவமாக்கிக் கொள்கின்றனர். அவர்கள் வாழ்க்கையின் அற்புதங்களை நினைவுபடுத்திக் கொண்டு அதன்வழியில் செல்கின்றனர். அவர்களை உருவ வழிபாடு கொண்டும் வணங்கி வருகின்றனர். இத்தகு வழிபாட்டினை ஆன்மிகம் என்ற சொல்லால் மொழிப்படுத்திக் கொள்கிறோம். இத்தகு தெய்வ நம்பிக்கை கொண்ட மனித குலத்தில் பிறந்த காரைக்குடியைச் சேர்ந்த நா. கனகராஜையர் புதுக்கோட்டை நகரின் மையத்தில் எழுந் தருளியுள்ள புவனேசுவரி அம்மன் மீது அளவுகடந்த பக்தி கொண்டு பாடல்கள் இயற்றியுள்ளார்.

நாட்டுப்புற வடிவம் கொண்ட தெய்வத் துதிப்பாடல்கள் எனும் வகையில் புவனேசுவரி அம்மனை இலக்கிய நயத்துடனும் எளிமையான பதத்துடனும் பாமர மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் பாடல்கள் எழுதியுள்ளார். புவனேசுவரியின் சிறப்பு அம்சங்கள், அவளை வணங்கினால் வாழ்வில் கிடைக்கக்கூடிய பேறுகள் போன்றவற்றை பாடியுள்ளார்.

அவர் மனதில் குடிகொண்டிருந்த புவனேசுவரியை நாட்டுப்புறப் பாடலாகப் பாடப்படும் கும்பிப் பாடலாகப் பாடியுள்ளார்.

"நாற்றிலே செல்வம் தழைத்திடத் தண்ணருள்
நல்கும் புவனேசி பாதமன்றே" (கும்மி -2)

"ஈகை விழியால் அருளும் புவனேசி' (கும்மி -4)

"நீரில் நெருப்பில் நிலத்தில் நிரம்பிய
நின்மலைக் காற்றிலும் விண்ணிலுமே
ஓரின் இருப்பது ணர்வாய் புவனேசி
ஓங்காரத் துன்னே ஒளிப்பவளே"

நீரில், நெருப்பில், நிலத்தில், காற்றில், விண்ணில் என எங்கும் நிறைந்தவளாய் விளங்குபவள் புவனேசி என்றும், நாட்டில் செல்வம் தழைக்கத் தண்ணருள் புரிபவள் என்றும், ஈகைக் குணம் கொண்டவள் புவனேசி என்றும் குறிப்பிட்டுள்ளார்.

"எள்ளினுள் நெய்போல எங்கும் பரவிய
எம்பெருமாட்டி புவனேசியை"

எள்ளினுள் நெய்போல நம்முள் பரவி இருப்பவள் புவனேசி என்கிறார்.

"சிந்தை யுருகுமுன் றோன்றும் உருவினாள்
தேவி புவனத்தின் நாயகியே"

உள்ளத்தில் தோன்றும் சிந்தனைகளில் முதல் எண்ணமே புவனேசிதான் என்கிறார்.

"செம்மை யொழுக்கம் சிறப்புப் படைத்தவர்
செய்யும் செயலே திருப்பணியாய்"

ஒழுக்கம் சிறப்புப் படைத்தவர் செய்யும் செயலை தமக்குச் செய்யும் திருப்பணியாய் ஏற்பாள் புவனேசுவரி என்று ஆரிட வேதம் உணர்த்துவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

“எமனுமே கைகட்டும் சேவக னாகுவான்
எம்பெருமாட்டி அருளி ருந்தால்”

புவனேசியின் அருள் பெற்றால் எமன்கூடக் கைகட்டி நிற்கும் சேவகனாவான் என்று கூறுகின்றாள்.

“மண்பால் வருபவர் தந்தம் அறிவால் மதித்தறிந்து
பெண்பா லிழிவையும் ஆண்பா லுயர்வையும் பேசுவதே
கண்பால் அருள்வார் தேவேசி பாதம் கதுவியபின்
பெண்பால் உயரும் புவனேசி யென்றெனப் பேணுவதே”

புவனேசியை வணங்கினால் பெண்களை இழிவு எனக் கூறுபவர் பெண்ணினம் உயர்ந்ததென்று தெளிவர்.

“குப்பையில் வீழ்ந்து புரளும் இழிந்த
குடியிற் பிறந்தவ ராயினுமே
செப்ப அறிந்த புவனேசி நாமத்தாற்
சீரும் சிறப்பும் திளைப்பளன்றே”

இழிந்த குடியினுள் பிறந்தாலும் புவனேசி நாமத்தால் சீரும் சிறப்பும் பெறமுடியும் என்பதைச் சுட்டுகின்றார்.

“யுக்தியும் வேண்டுமோ யோகமும் வேண்டுமோ
யோகேசி பாதம் பணிவதற்கே
பக்தியெனும் பெரும் பாவனை உள்ளதேல்
பார்த்து மகிழ்வார் புவனேசியே”

புவனேசியை வணங்க யுக்தியும் யோகமும் வேண்டாம். மனதில் பக்தி கொண்டால் அதைக் கண்டு மகிழ்வாள் புவனேசி அன்னை.

இது போன்று பலவகையில் புவனேசுவரி அம்மனைப் போற்றியும் புகழ்ந்தும் துதிப் பாடல்களாக எழுதியுள்ளார். கும்மிப் பாடல்கள் பற்றிய சிறு விளக்கமும் அம்மானை பற்றியக் குறிப்புகளும் நா. கனக ராஜையர் எழுதிய பாடல்களும் இடம் பெற்றுள்ளன. கும்மிப் பாடல் வகைப்பாடு பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது. பல்வேறுபட்ட அலங்காரத்துடன் காட்சியளிக்கும் புவனேசுவரியின் படங்கள், முதற்குறிப்பகராதி, எழுத்து மாற்றம் போன்றவை பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

# முன்னுரை

பழந்தமிழர்களின் கருத்து வெளிப்பாட்டிற்கான ஊடகமாக விளங்கியது சுவடி ஆகும் . இதன் வாயிலாகவே அந்தந்தக் காலத்து விழுமியங்கள், நம்பிக்கைகள், பட்டறிவு வெளிப்பாடுகள், அறிவுச் செயல்பாடுகள் போன்றவற்றைப் பதிவு செய்தனர். ஆகவே அத்தகைய பழமையும் முதன்மையும் வாய்ந்த ஊடகத்தைப் பாதுகாக்க வேண்டும். அதனை அடுத்த தலைமுறையினருக்குக் கொண்டு சென்று பயிற்றுவிப்பதன் மூலம் பழஞ்சுவடிகள் பல உயிர் பெற்று உலகுக்கு வெளிப்படும்.

தமிழ்ப் புலவர்கள் தமது அறிவாற்றலைப் பயன்படுத்தி இறந்து போக இருந்த தமிழ் ஓலைச்சுவடிகளைப் பெயர்த் தெடுத்து எழுதி, நல்ல நூல்களை அச்சுப் படுத்தி இறவாது மீட்டுள்ளார்கள். அத்தகைப் புலவர்கள் பலன் கருதாமல் செய்த அச்சுப் பணியின் மூலமும் பதிப்பின் மூலமுமே நமக்குச் சங்க காலத்தின் பெருமையும், ஐம்பெருங்காப்பியங்களின் சிறப்பும், தொல்காப்பியத்தின் புகழும் பதினெண் மேற்கணக்கு, பதினெண் கீழ்கணக்கு நூல்களின் ஏற்றமும், பிற இலக்கியங்களும் இலக்கண நூல்களும் உரை நூல்களும் நமக்கு கிடைத்துள்ளன.

பழங்காலத்தில் மனிதன் விலங்கைப் போல் வாழ்ந்து தனது இன்றியமையாத தேவைகளைச் சைகைகள் காட்டி அங்க அசைவுகள் செய்து தனது கருத்தை தன்னை ஒத்த பிறர்க்குத் தெரிவித்தான். பின்னர் உணர்ச்சியின் உந்துதலால் குரலைப் பயன்படுத்தி ஒலியினால் உருவான பேச்சு நாளடைவில் நன்றாகச் சீர்த்திருத்தி- பண்பட்டு- மொழியாக மாறியது. மொழியின் வளர்ச்சியில் நாம் உணர்ச்சி வடிவம், கருத்து

வடிவம் ஒலிவடிவம், எழுத்து வடிவம் எனும் நான்கு வகை வடிவங்கள் பெற்றது.

உண்மையான எழுத்தின் படிப்படியான வளர்ச்சி வரையப்பட்ட, செதுக்கப்பட்ட உருவங்கங்களிலிருந்து தான் பெறப்பட்டது என்பதை உணரலாம். "ஒவ்வொரு வடிவமும் ஒவ்வொரு கருத்தினைக் குறிப்பதோடு நிற்காமல் அந்தந்த வடிவத்திற்குரிய ஒலியையும் குறிப்பதாயிற்று.... முதலில் ஒவ்வொரு வடிவமும் காட்டும் முழு ஒலியையும் கொண்டு சொற்களை எழுதினர். பின்னர் அந்தந்த ஒலியின் முதலசையை மாத்திரம் அதனதன் வடிவம் குறிப்பதாகக் கொண்டு எழுதினர். அதற்குப் பின் ஒரு வடிவம் அதற்குரிய ஒலியின் முதலோசையையே குறிப்பதாகக் கொண்டனர்...... உருவெழுத்தும், கருத்தெழுத்தும் அசையெழுத்தும், ஓரசையெழுத்தும் படிப்படியாகப் பரிணமித்தன. இன்று நாம் ஆறாம் எழுத்துகளில் எந்தச் சித்திரமும் இல்லை என்பது உண்மை. ஆனால் இவையெல்லாம் ஓரோசை எழுத்துகளாக அமைந்த சித்திரங்களின் முறையான வழித்தோன்றல்களே" என்கிறார் திரு எஸ். இராமகிருஷ்ணன் (புத்தகத்தின் கதை, பண்புப் புத்தக வெளியீடு, 1960 பக்-25-26)

பண்டைய இலக்கியங்கள் அவை தோன்றிய எழுத்து வடிவில் இப்போது கிடைப்தில்லை. அந்த வடிவில் கிடைத்திருந்தால் தற்கால வரிவடிவத்தையே அறிந்துள்ள நமக்கு படிப்பது மிகவும் கடினமாக இருந்திருக்கும். எனவே, காலந் தோறும் மாறுபடும் வரிவடிவத்திற்கு ஏற்ப நூல்களை , ஏட்டில் பெயர்த்து எழுதிப் பயின்று பாதுகாத்து வந்தனர். சுவடிகள் தொடர்ந்து படியெடுக்கப் பட்டதால் தான் பாதுகாக்கப்பட்டன. தமிழ் நூல்கள் பலவும் மனப்பாடம் செய்து எழுதி வைப்பதற்கு வாய்ப்பாகச் செய்யுளிலேயே அமைந்தன. உரையாசிரியர்களின் உரைநடை கல்வெட்டுச் செய்திகள் அரசாணைகள், மெய்கீர்த்திகள் போன்றவை ஒருவகைச் சந்தத்தில் மனப்பாடம் செய்ய ஏற்றவகையில் இருந்தன. (சுவடிப் பதிப்பு நெறிமுறைகள். ப.6)

சமயச் சான்றோர்களும், புலவர் பெருமக்களும் அவ்வப்போது தோன்றிப் பல சமய நூல்களையும், இலக்கண, இலக்கிய, நிகண்டு நூல்களையும் படைத்துத் தந்துள்ளனர். இவையாவும் சுவடி வடிவில் தான் தோன்றின. மக்களின் தேவைக்காகவும் பல சுவடிகள் படியெடுக்கப் பெற்று வளர்ச்சியுற்றன. சங்க நூல்கள் ஓலைச் சுவடியில் உறங்கிக் கொண்டிருந்தன. அவைகளின் பெயர்களைக் கூடப் பாடஞ் சொல்லுவோர் உரைப்பதில்லை. அவர்களில் அப்பெயர்களை அறிந்தவர் சிலர். அறியாதவர் பலராவார்.

ஏடுகள் திரட்டும் தொல்லைகளிலிருந்தும், ஏடு படிப்போரின் அசட்டுத்தனத்திலிருந்தும், ஏடுகளில் காணப்படும் வழுக்களைக் களைவதில் இருந்த துன்பத்திலிருந்தும் மெல்ல மெல்ல மீண்டு உ.வே.சாமிநாதையர் பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்க முற்பட்டார். இதற்குப் பலரும் பல வகைகளில் இவருக்குத் துணையாக இருந்துள்ளனர்.

"ஆற்றல் அழியும் என்று அந்தணர்கள் நான்மறையைப்
போற்றி உரைத்து ஏட்டின் புறத்து எழுதார் – ஏட்டு எழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினும் ஆற்றல் சோர்வு இன்று"

(திருவள்ளுவ மாலை –15)

எழுத்தின் ஆற்றல் அழியக்கூடாது என்பதால் அதனை ஓலையில் எழுதக்கூடாது என அந்தணர் குறிப்பிட்டனர். ஆயினும் ஓலையில் எழுதி ஆற்றல் அழியாமல் நிற்பது திருக்குறள் ஆகும்.

சங்க காலம் முதல் திரட்டப்பட்ட, இயற்றப்பட்ட பாதுகாக்கப் பெற்ற சுவடிகளில் பல பூச்சிகளுக்கு இரையாகியும், விளங்காத நிலையிலும் உள்ளன. சுவடிகள் இயற்கை, செயற்கை, அறியாமை என்னும் மூன்று காரணங்களால் அழிந்திருக்கின்றன.

பல்வேறுபட்ட சூழ்நிலைகளில் சுவடிகள் அழிவதற்கு இயற்கை ஒரு காரணியாக இருக்கிறது. ஓலையில் எழுதப்பட்ட சுவடிகள் மட்டுமன்றிக் கல்லில் வெட்டப்பட்ட கல்வெட்டும், செப்புத் தகடும் இன்னும் பல சுவடிகளும் இயற்கையின் செயலோட்டத்தில் ஆழ்ந்து விட்டன.

பெருமழை, பெருங்காற்று, வெயில் போன்ற இயற்கை சீற்றங்களால் சுவடிகள் அழிந்திருக்கின்றன. பலவகை செயற்கைத் தன்மைகளாலும் சுவடிகள் அழிந்துள்ளன. போரில் வெற்றி பெற்ற வேந்தன் பகைவனின் வரலாற்றை அழிப்பதற்காக அந்நாட்டில் இருந்த சுவடிகளை அழிந்திருக்கிறான். மக்கள் தங்களின் வாழ்க்கை வசதியை நாடிப் பல்வேறு இடங்களுக்குக் குடிமாற்றம் செய்யும்போது சுவடிகள் அழிந்துள்ளன. அரசியல் மாற்றம், மன்னர்களிடையே நிகழ்ந்த போர், மக்களின் குடிப்பெயர்ச்சி, வெளிநாட்டினருக்கு விற்றல், எரியிலிடல், நீரில் எறிதல், கவனமின்மை, பாதுகாப்பின்மை, கையாள்வதில் அறியாமை போன்ற செயற்கைத் தன்மைகளால் அழிந்துள்ளன.

இவ்வாறு அழிந்து போன சுவடிகள், அழிக்கப்பட்ட சுவடிகள் தவிர மீதமுள்ள சுவடிகளைப் பல நூலகங்களில் பாதுகாத்து வைத்துள்ளனர். இன்று நவீன கருவிகளின் உதவியாலும் நாகரிகத்தின் வளர்ச்சியாலும் மேம்பட்ட முறையில் கணினியில் பதிவு செய்யப்பட்டு பாதுகாக் கப்படுகிறது. அத்தகையச் சுவடிகளை பதிப்பித்துச் சென்ற நம் முன்னோர்களின் பதிப்பு நெறிமுறைகளைப் பயன்படுத்தி சுவடிகளைப் பதிப்பிக்கும் பணியைத் தொடர்வோம். அவற்றின்

தொடக்கமாகவும், அவற்றிற்கு ஊக்கமளிக்கும் வகையில் இப்பட்டயப் படிப்பு துணை நிற்கின்றது.

இந்த பட்டயப்படிப்பின் ஒரு பகுதியான சுவடியிலிருந்து பெயர்த்தெழுதி அச்சிட்டு பதிப்பிக்கும் நிலையில் ''புவனேசுவரி பிரபந்தத் திரட்டு'' எனும் சுவடியைப் பெயர்த்தெழுதி அச்சிட்டு பதிப்பிக்கும் பணி மேற்கொள்ளப் பட்டுள்ளது. புதுக்கோட்டையில் எழுந்தருளியிருக்கும் புவனேசுவரியை 1966ல் மதுரையைச் சேர்ந்த (காரைக்குடி) நா.கனகராஜையர் எனும் தமிழ்ச் சான்றோரால் எழுதப்பெற்ற பாக்களின் தொகுப்பாக ''புவனேசுவரி பிரபந்தத் திரட்டு'' உள்ளது. புவனேசுவரியைப் போற்றிப் பாடப்பட்டிருக்கும் இப்பாடல்கள் முதன்முறையாக சுவடியிலிருந்து அச்சில் ஏற்றப்பட்டுள்ளது. இப்பாடல்கள் அச்சேறுவதற்கு முன் சுவடி நூலகங்களில் பதிப்பிக்கப் பட்டுள்ளதா எனவும் இதன் தொடர்ச்சியாக வந்துள்ள பாடல்கள் மற்றும் வேறு ஏதேனும் உள்ளதா என்று ஆராய்ந்ததில் எங்கும் இல்லை என்ற நிலையில் 'புவனேசுவரி பிரபந்தத் திரட்டு எனும் இந்நூல் தொகுப்பில் பத்துக்கும் மேற்பட்ட நாட்டுப்புறப்பாடல் வடிவம் கொண்ட பாடல்களை எழுதியுள்ளார். ஆய்வு வரையறை கருதி அலங்காரம், கும்மி, அம்மானை போன்ற மூன்றினை மட்டும் அச்சிட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

> ''முன்னோர் மொழி பொருளே யன்றி அவர்மொழியும்
> பொன்னே போற்போற்றுவர் பொற்புலவர்- அன்னோர்
> நடையிடையத் தம்வழியே நாட்டிமொழி மாற்றல்
> கடையிடையர் மாட்டுவினை காண்.''

(கலித்தொகை - பதிப்புரை)

என்னும் செய்யுளில் கூறியபடி சுவடிகளில் காண்பதைத் தம் விருப்பம் போல் திருத்துதல் பதிப்பாசிரியருக்கு உரிய செயலன்று. என்றாலும் சுவடிகளில் படியெடுப்போரால்

நிகழ்ந்துள்ள பிழைகள் ஏராளம் காணப்படுகிறது. இதை உணர்ந்து பதிப்புப் பணியை மேற்கொள்ள வேண்டிய கடமையும் பதிப்பாசிரியருக்கு உண்டு என்பதைக் கருத்தில் கொண்டு பெரிய அளவில் மாற்றங்கள் இல்லையெனினும் சிறு சிறு வடிவ மாற்றம் செய்யப்பட்டு அச்சிடப்பட்டுள்ளது.

# 1. புவனேசுவரி பிரபந்தத் திரட்டு

## புவனேசுவரி பிரபந்தத் திரட்டு

பிரபந்தம் என்பது செய்யுள் வடிவ அடிப்படையிலும் உள்ளடக்கத்தின் அடிப்படையிலும் பாகுபடுத்தப்பட்ட சிற்றிலக்கிய வகை ஆகும். பிரபந்தத் திரட்டு என்பது பல சிற்றிலக்கிய வகைகளின் தொகுப்பாகும். நா. கனக ராஜையர் புவனேசுவரி அம்மனை பாடுபொருளாக வைத்து எழுதிய பத்திற்கும் மேற்பட்ட சிற்றிலக்கிய வகைகளின் தொகுப்பே "புவனேசுவரி பிரபந்தத் திரட்டு" ஆகும். இப்பிரபந்தத் திரட்டில் இடம்பெற்றுள்ள புவனேசுவரி கும்மி, புவனேசுவரி அம்மானை புவனேசுவரி அலங்காரம் என்னும் சிற்றிலக்கியப் பாக்களைப் பற்றிக் காணலாம்.

## கும்மி

பெண்கள் பலர்கூடி இன்பப்பெருக்கில் கைகொட்டிக் களித்துப் பல பொருள் பற்றி வரும் கதைப் பாடல்களைச் சமய, சமூக விழாக்களில் சுவையுடன் பாடிக் கலைச் சிறப்புடன் ஆடுவது கும்மி. இதனைக் கும்மியடித்தல், கொம்மிக் கொட்டுதல், கொப்பிக் கொட்டுதல் என்று வெவ்வேறு முறையில் கூறுவர்.

### கும்மி – பொருள் விளக்கம்

'கும்முதல்' என்பதற்கு 'கைகொட்டுதல்' என்பது பொருள். 'கும்மாளம் போடுதல்' என்பது 'குதித்தாடுதல்' என்ற பொருளில் இன்றும் நாட்டுப்புறங்களில் வழங்கி வருகிறது. இவற்றை அடிப்படையாகக் கொண்டு கைகொட்டி ஆடுவதைக் 'கும்மி' என்று அழைத்திருக்கலாம்.

'குழுமி' என்ற சொல்லில் இருந்து 'கும்மி' என்ற சொல் உருவாகியிருக்க வேண்டும் என்பர் அ.கி. பரந்தாமனார். பெண்கள் கூடி ஆடுவதால் இப்பெயர் பெற்றிருக்கலாம். கும்மி' என்ற சொல் சாந்துக்கு உரிய கலவைப் பொருள்களைச் சேர்த்து இடித்தல் என்ற பொருளிலும் 'குமுக்கு' என்பது துணியை நனைத்துக் கைகளால் பிடித்துத் தப்புதல் என்ற பொருளிலும் வருவதாகக் கூறப்படுகிறது. இத்தகைய செயல்களில் ஒருவிதத் தாள ஒழுங்குடைய ஒலி எழுவதைக் காணலாம். 'கொம்' என்பது ஓர் ஒலிக்குறிப்புச் சொல்லாகும். அது திராவிட மொழிகளில் காணப்படுகிறது. அதிலிருந்து குழு, கும்மு, கும்மி ஆகியவை தோன்றியிருக்கலாம். கைகுவித்து அடித்துப் பாடி மகிழும் ஆட்டமே 'கும்மி' என வழங்கப்படுகிறது.

## கும்மியைக் குறிக்கும் பிற சொற்கள்

'கொம்மை' என்ற சொல் கைகளைக் குவித்துக் கொட்டல் என்ற பொருளில் பழமொழி, சீவகசிந்தாமணி, நைடதத்திலும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

அகநானூறு 'கொப்பி' என்று கும்மியைக் குறிப்பிடுகின்றது. ஆந்திரம், தமிழகத்தில் உள்ள செட்டி நாட்டிலும் இவ்வழக்கினைக் காணலாம்.

சோமலை அவர்கள் 'கொம்மாய்' என்று இதனை குறிப்பிடுகின்றார். 'சண்முகர் கொம்மி', 'நடேசர் கொம்மி' போன்ற நூற்பெயர்களின் மூலம் 'கொம்மி' என்று குறிப்பிடும் வழக்கினை அறியலாம்.

நன்னன்னா கொட்டுதல், தட்டியாங் கொட்டுதல், கொண்டான் கொட்டுதல் என்று தென்னார்காடு, வடார்க்காடு மாவட்டங்களில் அழைக்கப்படுவதாக ஆய்வாளர் திரு. ஆறு இராமநாதன் குறிப்பிடுகின்றார்.

'நன்னன்னா கொட்டவும் நாளாச்சி – அம்மா
நாணயமான ஏரிக்குள்ளே தான்'

என்ற நாட்டுப்புறப் பாடலால் இதை அறியலாம்.

## கும்மி கொட்டும் முறை

பெண்கள் வட்டமாக நின்றுகொண்டு குத்துவிளக்கு, தெய்வச்சிலை, மலர்க்கூடை, பலகாரக் கூடை போன்ற இவற்றில் ஏதாவது ஒன்றை நடுவில் வைத்து அதனைச் சுற்றி வந்தவாறு கைகொட்டி ஆடிப்பாடுவர். பெண்கள் இறுக்கிக் கட்டிய ஆடையுடன் நன்றாகத் தங்களை ஒப்பனை செய்து ஆடுவதாகக் கும்மி நூல்கள் விளக்குகின்றன. பெண்களில் பெரியவர், சிறுமியர் என்று வேறுபாடு எவையுமின்றி இணைந்து நின்று ஆடுவர். பெரும்பாலும் சிறுமியரும் கன்னியரும் கும்மி கொட்டுவதுண்டு. மங்கலப் பெண்களே ஆட்டத்தில் கலந்துகொள்வதாகக் கும்மிப் பாடல்கள் கூறுகின்றன.

"குங்குமம் பொட்டுகள் தானணிந்து வண்ணக்
கூட்டங்கள் போலவே சேர்ந்து கொண்டு
மங்கலப் பெண்க ளெல்லா மபிசேக
மண்டபம் முன்வந்து சேருங்கடி"

என்று வரும் பாடலால் இது செவ்வனே விளங்கும்.

## கும்மி தெய்வம்

கும்மிப் பாட்டுக்கும் இறை வணக்கத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருந்துள்ளது. பெண் தெய்வ வழிபாட்டில் கும்மி ஒரு முக்கிய பங்கு பெறுவதாகக் கூறலாம். இன்றும் தமிழ்நாட்டில் மாரியம்மன், பகவதியம்மன் போன்ற பெண் தெய்வங்களின் கொடை விழாக்களில் பத்து நாள்கள் தொடர்ந்து பெண்களால் கும்மிப் பாடல்கள் பாடப்படுகின்றன. பொங்கல் பண்டிகை,

பெண்கள் விரதமிருத்தல், முளைப்பாரியிடல், கிராவண்டை போடல், ஏழை வேண்டல், நிலாக் காலத்தில் இன்பமாகப் பொழுதைப் போக்கல் முதலிய நிகழ்ச்சிகளில் கும்மியடித்துப் பாடுவது வழக்கம்.

**கும்மியின் வகைகள்**

பாடலமைப்பு, ஆடல்முறை ஆகியவற்றிலுள்ள வேறுபாடுகளைக் கொண்டு இயற்கும்மி, ஒயிற்கும்மி என்று இருவகையாகப் பிரிக்கின்றனர். ஆண்கள் கொட்டுவது ஒயிற்கும்மி ஆகும்.

கும்மிப் பாடல்களின் பாடுபொருளைக் கருத்தில் கொண்டால் சமூகம், சமயம், வரலாறு ஆகிய மூன்று பெரும் பிரிவுகளுக்குள் அனைத்துக் கும்மிப் பாடல்களையும் அடக்கி விடலாம்.

சமயக் கும்மிகளை இந்து, கிருத்தவ, இசுலாம் சமயச் சார்புக்கும்மிகள் என்று பிரிக்கலாம். இந்து சமய உணர்வுடைய கும்மிகளைப் புராணம், இதிகாசம், தத்துவம், சிறு தெய்வக் கதைகள், தெய்வத் துதி என ஐந்து உட்பிரிவுகளாகக் கூறலாம்.

**அமைப்பு முறை**

கும்மிப் பாடல்கள் முதலில் இறைவழிபாடாகவே இருந்துள்ளன. பன்னெடுங்காலம் மனப்பாடமாகவே வாழ்ந்திருக்க வேண்டும். இதன் மெட்டமைப்பு மக்களைக் கவர, பல வழிநடைப் பாடல்கள் கும்மி மெட்டில் எழுதப் பெற்றுள்ளன. பின்னர் பல கதைப் பாடல்கள் கும்மி அமைப்பாக எழுதப் பெற்றன.

கும்மிப் பாடல்கள் காப்புச் செய்யுள் பாடியே தொடங்கப் பெறுகின்றன. கதைப் பாடல்கள் போன்று வளர்கின்றன. இறுதியில் வாழ்த்துடன் முடிவதைக் காணலாம். பெரும்பாலான கும்மிப் பாடல்களின் தொடக்கத்தில் அவை கும்மிக்கு உரியவை என்று

வெளிப்படையாகக் கூறுவதை ஆசிரியர்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர். பெண்களை விளித்துக் கும்மியடித்துப் பாடுமாறு வேண்டுவதைக் காணலாம்.

கும்மிப் பாடல்கள் பெரும்பாலும் இரண்டு அடிகளை உடைய கண்ணிகளால் ஆக்கப்பெற்றிருக்கும். இயற்கும்மியின் கண்ணிகள் அடிக்கு, ஏழு சீர்களைக் கொண்டதாக இருப்பதை மிகுதியாகக் காணலாம். முதற்சீரும் ஐந்தாம் சீரும் மோனை பெற்றிருப்பதனால் அந்த இடத்தில் அடிமடக்கி எழுதுவர். பெண்பாவுக்குரிய தலைகள் வருவதே சிறப்பாகக் கருதப்படுகின்றது. இதுதவிர ஒவ்வொரடியினும் நான்காவது சீர் தனியசைச் சீராக வருவதும் உண்டு.

மிக அருகிய நிலையில் எட்டு சீர்களையுடைய இரண்டு அடிக்கண்ணிகள் வருவதும் உண்டு. இன்னொரு அடி சேர்ந்து ஒரு இடைச்சொல்லின் துணையுடன் இணைந்து வருவதையும் சில கும்மிப் பாடல்களில் காணலாம்.

ஒயிற்கும்மி பாடல்கள் சந்தக் கவிகளாக விளங்குகின்றன. முதல்வரி நான்கு சீர்களையும் இரண்டாம் வரி மூன்று சீர்களையும் பெற்றுவிடும். மூன்றாவது வரியும் நான்காவது வரியும் இரண்டடிக்குச் சீர்களைக் கொண்டிருக்கும். இவ்விரு வரிகளும் எதுகை பெற்றிருக்க வேண்டும். இவ்விரண்டு வரிகளுக்கும் வெண்டளை பார்ப்பதில்லை. ஐந்தாவது வரி மூன்று சீர்களைப் பெற்றுவரும். ஐந்து வரிகளின் முதல் சீர் மோனை பெற்றிருக்கும். இவையிரண்டு வரிகளைத் தவிர மற்ற வரிகள் வெண்டளை தழுவி வரும்.

### சிறப்பு

பாடலின் எளிமை, இனிமை, கதை விளக்கத்துக்கு உதவும் தன்மை, ஆடலுக்குப் பொருந்தும் பான்மை ஆகிய பண்புகளே கும்மிப் பாடலின் சிறப்புத் தன்மைகள். 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் கும்மிப் பாடல்கள் மிகுதியாகப் பாடப்பெற்றன.

அவை ஓர் இலக்கிய வகையுள் அமையும் இயல்புகளுடன் வளர்ந்தன.

இசைக்கும் தாளத்திற்கும் பொருந்தும் சுவையான இயல்புகளுடன் கும்மிப் பாடல்கள் விளங்குகின்றன. மக்களைக் கவர்ந்த சிறப்பு நிகழ்ச்சிகளைக் கும்மிப் பாடலாகப் பாடி மகிழ்ந்துள்ளனர். கதைகள், உண்மை நிகழ்ச்சிகள் ஆகியவற்றைக் கொண்டு பின்னப்பட்ட கும்மிப் பாடல்கள் அறிவு விளக்கக் கருத்துகளை வாரி வழங்கியுள்ளன.

தமிழ் இலக்கிய வானில் தனக்கே உரிய தனித்துவத் தன்மைகளுடன் தனி இலக்கிய இனமாக விளங்கும் தகுதியுடன் கும்மிப் பாடல்கள் எழுதப் பெற்றுள்ளன. முந்திய தலைமுறைக்குக் கலையின்பம் கொடுத்த கும்மிப் பாடல்கள் இனிவரும் தலைமுறையினருக்கு இன்பம் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நெறியிலேயே 'புவனேசுவரி கும்மி' பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. ஏழு சீர்களைக் கொண்டு இரண்டு கண்ணிகள் பெற்று புவனேசுவரி அம்மனை துதிக்கும் துதிப்பாடலாக கும்மிப் பாடல்கள் இயற்றப்பெற்றுள்ளன. முதலில் காப்புப் பாடலும் பின் அகர வரிசை முறையிலும் மோனைத் தொடர் கொண்டும் எழுதப்பெற்றுள்ளன. இலக்கிய வடிவம் கொண்டே நாட்டுப்புறப் பாடல் சாயலில் புவனேசுவரி அம்மனை விளித்துப் பாடப்பட்டுள்ளது.

பாடலில் முதல்வரி நான்கு சீர்களையும் இரண்டாம் வரி மூன்று சீர்களையும் கொண்டு இரண்டு கண்ணிகளைப் பெற்று வந்துள்ளது. பாடலில் எளிமையான பதங்கள் இனிமையைத் தரும் பொருள் இசையுடன் பாடி ஆடுவதற்கு பொருந்தும் பான்மை போன்றவை உள்ளடக்கிய இயல்புகளுடன் பாடப்பட்டுள்ளது.

## உ. புவனேசுவரி கும்மி

### காப்பு

கும்மி யடியுங்கள்! கும்மி யடியுங்கள்!
குதித்துக் கும்மி யடியுங்களே – தமிழ்
துதித்துக் கும்மி யடியுங்களே!

அம்மை புவனேசி ஆரருளாலே
அவனி நலம்பெற வேண்டுமென்றே கும்மி யடியுங்கள்!

1. அருமை யுடைய பொருளில் லைதேவி
அடிமலர் நெஞ்சில் அடைந்தவர்க்கே
பெருமை எவைஎவை உண்டோ அவையெலாம்
பேணி அவர்க்குப் பணிசெய்யுமே!

2. ஆற்றிலை வெள்ளம் பெருகி வருமென்றால்
அருகுள்ள கழனிகள் பொன்கொழிக்கும்
நாற்றிலே செல்வம் தழைத்திடத் தண்ணருள்
நல்கும் புவனேசி பாதமன்றே!

3. இல்லறம் ஓங்கி இயன்ற வளவிலே
யாவர்க்கும் நன்மை இயற்று தற்கே
நல்லறம் நாட்டில் நடக்கும் புவனேசி
நளின மலர்ப்பதம் மெய்த்துணையே!

4. ஈகை யறியா உலோப குணத்தாரை
எய்தி யிரப்பதை விட்டொ ழித்தே
ஈகை விழியால் அருளும் புவனேசி
இன்புறும் ஆலயம் போற்றுவமே!

5. உள்ளம் ஒளிர உடம்பே சிறப்புற
உள்ளே புகுந்த புவனேசியை
வெள்ளம் கருணை விழிக்கும் விழியாளை
வேண்டத் தெரியாதார் வீணர்களே!

6. உறக்கம் உடைய மனத்தின ராயினும்
உள்ளொளி தங்கும் புவனேசியை
ஆக்கம் அருள்கென வேண்டா திருப்பாரேல்
அல்லல் ஒழிக்கும் வழியில்லையே!

7. எள்ளினுள் நெய்போல எங்கும் பரவிய
எம்பெ ருமாட்டி புவனேசியை
எள்ளிலும் போற்றிலும் என்றும் குறைவிலா
இன்பம் அருள்வத வள்வழியே!

8. ஏரின் உதவியால் ஏற்றம் அடைந்தவர்
எம்மனை வந்துபுகுக வென்றே
சீரின் மிகுந்த புவனேசி மெய்யருள்
தேடத் தெரியா திருப்பதுண்டோ!

9. ஐயம் இடுகென ஆயிரம் வீட்டிலே
ஆதுல ராசி இரந்தவரும்
ஐயை புவனேசி மெய்ய ருளாலே
அரசினும் மிக்க பதம்பெறுவார்!

10. ஒன்பது வாயில் உளதொரு கோயில் நம்
உள்ளமே அங்குக் கருவறையாம்
அன்பது மிக்க புவனேசி வாழ்வுற
ஆலயம் நன்றாய் அமைத்திடுவோமே!

11. ஓது மறைகள் அனந்த மென்றுண்மை
உரைத்த முனிவர் பலருளரே
யாதும் மறைத்துப் புதைக்கும் மறைக்குள்
இருப்பாள் புவனேசி எம்மனையே!

12. ஔவிய மற்ற மனத்தையே கோயிலாய்
அம்மை புவனேசு கொள்ளாகின்றாள்
செவ்விய வாழ்வு சிறப்ப அருள்கின்றாள்
தேவி திருவருட் செல்வத்தினால்!

13. அஃகி அகன்ற அறிவுள ராயினும்
அன்னை புவனேசி பாததுதி
வெஃகி விருப்பின் விளக்க அறியாதார்
வெற்றுடம் பாகி விழுவலரே!

14. கல்விக் கடலிலே நீந்திக் கரையேறக்
கையிரண் டாலும் புவனேசியாம்
செல்வி திருவடி பற்றிக் கொண்டாரெனிற்
சென்ற திசையெல்லாம் சீர்மிகுமே!

15. காதலை மாயும் பொருளிலே பாய்ச்சியே
கண்கெட் டழியும் இனத்திறுக்கே
சாதலை ஓட்டும் புவனேசி பாத
சரோருகக் காதல் விளக்குவமே!

16. கிளிக்கு மொழிகளைக் கற்பிக்கும் யோகி
சினத்து மொழிபுவனேசி அன்றோ
ஒளிக்கு நிலயம் அவள்திருக் கோயிலென்பது
உள்ளம் கருதும் சிறப்பினிலே!

17. கீரையும் கூழும் கலக்கிக் குடித்தாலும்
கேவலை சச்சிதானந்த இவை
பேரையும் மேருசிகர வியப்பையும்
பேசும் புவனேசி அன்பினமே!

18. குப்பையில் வீழ்ந்து புரளும் இழிந்த
குடியிள் பிறந்தவ ராயினுமே
செப்ப அறிந்த புவனேசி நாமத்தாற்
சீரும் சிறப்பும் திணைப்பளன்றே!

19. கூட்டம் பெருகியே கொண்டாடும் அன்பிற்
குதிக்கும் புவனேசி பாதமலர்
தேட்டம் அவருக்கு வேறிய தேவி
திருவரு ளாகிய செல்வமன்றோ!

20. கெம்பு கோமேதகம் மாணிக்கம் வச்சிரம்
கேட்பதே இல்லை புவனேசியே
செம்பொன் கலசமும் வேண்டுவ தில்லையே
சிந்தை யுருகிய அன்புளதேல்!

21. கேள்வியே கல்விக்குத் தக்க துணையென்று
கேடிலா நாவலர் கூறுகின்றார்
வேள்வியில் வந்து விளங்கும் புவனேசி
வேதத்தின் மிக்கதோர் கேள்வியுண்டோ!

22. கையிரண் டுள்ளவள் என்று நினைப்பவர்
கற்பக மென்பர் கரங்களையே
கையிரண் டாயிரம் உள்ள புவனேசி
கற்பகச் சோலைக்கு வாழ்வளித்தாள்!

23. கொட்டம் கமழும் திருக்கோயில் புக்கவர்
கும்பிடா தேகும் வழக்குளதோ
பட்டம் பகல் போலிரவும் புவனேசி
பார்வை பருவதறிந் தவரே!

24. கோயிலைக் கட்டியே ரும்பிலோ யென்று
கோமாட்டி கூறக்கருத வில்லை
வாயிலைத் தேடிமனக் கோயில் வந்துயர்
வாழ்வெலாம் வைப்பாள் புவனேசியே!

25. கெளவை பரந்தாலும் காசுக்கே தாசராய்க்
காலம் கடத்தும் மனித்தரையே
செல்லை நெறியிற் செலுத்தும் புவனேசி
சேர்ந்தாள் புதுவை நகரத்திலே!

26. சப்பரம் வேண்டா மிர்தமும் வேண்டாமே
தாய் புவனேசி திருப்பணிக்கே
ஒப்புர வோர்த்துயர் உள்ளமே வேண்டும்
உருகும் உயிரொடு டலுடனே!

27. சான்றென நின்று தராதலம் காப்பவள்
தாய்புவ னேசி யெனப்புகல்வார்
சான்றவர் என்றும் அவள்திருத் தாள்மலர்
தயையிலும் நெஞ்சிலும் சார்த்துவரே!

28. சிறப்பெனும் சொற்ற திருநிலை மானிடர்
சேரஅருள் செய் திருவடியாள்
அறப்பெருங் காட்சி அருளும் புவனேசி
ஆயிரம் கோடி யுலகுடையாள்!

29. சீர்மை சிறப்புறு சிந்தனை யுள்ளவர்
சேருநெறி யினிவே றில்லையே
ஓர்மை முழுதும் புவனேசி பாதத்தில்
ஊன்றியிருப் பதுரிமை யன்றே!

30. சுற்றம் தழுவிச் சுகத்திலி ருக்கவே
ஆழும் மனமுள்ள நன்மக்களே
சுற்றம் அனைத்திலும் மிக்க புவனேசி
தோன்ற மனத்தை அமைத்திடுமின்!

31. ஆதொரு வாது புரிந்து பிறர்நலம்
தோன்றிற் பொருத மனத்தினரும்
மாதர சாகிய சீ புவனேசுரி
வண்மையாற் தூய்மை பெறுவதுண்டே!

32. செம்மை யொழுக்கம் சிறப்புப் படைத்தவர்
செய்யும் செயலே திருப்பணியாய்
அம்மை புவனேசி யேற்றருள் வாளென
ஆரிட வேதம் உணர்த்தியதே!

33. சேற்றில் எழுந்த கமலமொ ருகோடி
தேவி புவனை திருவடிமேல்
ஏற்றி மனங்குளிர் மெய்யன்பர் எய்தும்
இடமெது வென்றே யுரைப்பதுண்டே!

34. சையொத் திருந்தாலு மையமிட் டுண்ணாத
சண்டாள சண்டாள ராயினுமே
கையொத் திதயம் குவியே கூப்பிரார்
காண்பர் புவனேசி மெய்யருளே!

35. சொன்றி பிறக்கும் எளியலர் நெஞ்சத்
துயர மறியாத பாவியரும்
நன்றி புரிந்த வராய்ப் புவனேசுரி
நற்பத மெய்துவர் பேருரைத்தே!

36. சோர்வை ஒழிக்கும் சுறுசுறுப் புள்ளவர்
தொண்டரி னத்திலே சேர்ந்தனரேல்
ஆர்வ மிகலே அவர்க்கருள் காட்டுவள்!
அன்னை புவனேசி சத்தியமே!

37. சௌரி எனும்பெயர் தாங்கிய கண்ணன்
தனக்குள் இருப்பது காட்டுகின்றாள்
கௌரியும் பூமகள் வாணியும் தானென்றே
காட்டும் புவனத்தின் நாயகியே!

38. ஞமலியும் சிங்கமாம் யானையும் பூனையாம்
நாயகி உள்ளக் குறிப்பிருந்தால்
எமனுமே கைகட்டும் சேவக னாகுவான்
எம்பெருமாட்டி அருளி ருந்தால்!

39. ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்வியாழனே
நல்வெள்ளி சனியென்றே ழுதினம்
கோயில் வந்து தொழும்புரிந்தோர்க்குக்
கூட்டுவள் வாழ்வு புவனேசியே!

40. ஞெகிழி கடைந்து நெருப்பை வளர்ப்பவர்
நெருப்புளே காண்பர் புவனேசியை
எகினமோ ஞர்தி மயிலொரு வாகனம்
எம்பெரு மாட்டிக் குரியனவே!

41. ஞொன்சிய மெய்யினர் நூறு வருடங்கள்
நோன்பு புரிந்தேழு நோன்மையிரும்
வென்றாவ தில்லையே தேவி புவனேசி
மெய்யருள் பெற்ற உறுதியினாள்.

42. தந்தையின் மிக்கவள் தாயினும் மிக்கவள்
சாது சங்கத்துக்கு நாயகியே
சிந்தை யுருகுமுன் றோன்றும் உருவினாள்
தேவி புவனத்தின் நாயகியே.

43. தாமரை மல்லிலை சம்பங்கி முல்லையே
சண்பகம் தவனம் தாழைமலர்
தாமரை வென்ற பாதத்திலே வீழத்
தவத்துக் கறோம் புவனேசியே.

44. தின்றி பலவகை உண்டி பலவகை
தேடித் திரியும் மனக்குரங்கே
நன்றி பெருகவே தேவி புவனேசி
நாமம் உரைக்கப் பயின்றளையோ!

45. தீமை பிறர்செயின் சிந்தை சுருங்குவாய்
தேடிப் பிறர்க்குநீ தீங்கிழைப்பாய்
காம குரோதம் கழியப் புவனேசி
கால்மலர் பற்றி அடங்குகவே!

46. துன்பம் வருமுன்னே சோர்ந்து விழுவாயே
துன்பம் இமயமலை யில்லையே
இன்பம் வருமுன் எழுந்து குதிப்பாயே
யாவும் புவனை திருவருளே!

47. தூய்மை மனத்திலே சொல்லிற் செயலிலே
தோன்றி வர விரும்புகிறாய்
வாய்மை விரதம் வசித்தாற் புவனேசி
வந்து விளங்குவள் நெஞ்சகத்தே!

48. தெற்கு வடக்குக் குடக்குக் குணக்கெனச்
சென்று நீபெற்ற பயனென்னையே
நிற்குள் இருக்கும் புவனேசி கோயிலில்
நெய்விவிளக்கேற்றினை நோக்கினையோ!

49. தேனைப் பொழிந்தனை பாலினா லாட்டினை
தேவி புவனேசி மெய்யுருவை
ஊனைச் சுருக்கி உளத்தைப் பெருக்கிநீ
உள்ளுற நோக்க முயன்றதுண்டோ!

50. தையலர் யாரும் நின்காமக் கனிபாட்டுத்
தாங்கும் கனமென எண்ணுஇங்கும்
ஐயகோ மாவை அரனைப் பெண்ணாக்கிய
அன்னை புவனேசி முன்னிவையே!

51. தொன்மை யளந்து தெரிந்தவள் போலவே
தோலும் விருந்தும் இயற்றுகின்பே
இன்மை யொழித்தருள் தேவி புவனேசி
எங்கும்இருப்ப தறியாமலே!

52. தோற்றம் வளர்ச்சி ஒழுக்க மில்லாததோர்
தூய திருவொளி உண்டுகண்டாய்
ஆற்றல் அறிவே அருளே அழகேயாம்
அன்னை புவனேசி ஆமதுவே!

53. தௌவை உறவும் வெறுப்பாய் திருமகள்
தன்னை வரவேற்க நன்கறியாய்
ஔவை யுரைத்த வழியிலே புவனை
ஆலயம் நோக்கி நடந்ததுண்டோ!

54. நன்மை எனக்கே வருகவென நின்று
நாவளம் காட்டியே பாடுகின்றாய்
நன்மை யுலகுக்கே நல்கும் புவனேசி
நன்றாளை நோக்கி நகைத்திடவே!

55. நாடு நலம்பெறும் நாட்டம் நயந்திலா
நாடகம் ஆடினாய் ஞானியைப்போல்
பீடு மிகுந்தளை என்று புவனேசி
பேசுவாள் என்றே கருதினையோ!

56. நிற்க அறியாய் நடக்க அறியாய்
நெருங்கத் தகுமோ புவனேசியைக்
கற்க முயன்றாயோ காலம் கடந்த
கணக்கையும் கூட்டிக் கழித்தனையே!

57. நீரில் நெருப்பில் நிலத்தில் நிரம்பிய
நின்மலை காற்றிலும் விண்ணிலுமே
ஓரின் இருப்பதுணர் வாய் புவனேசி
ஓங்காரத் துன்னே ஒளிப்பவளே!

58. நூறுங்கு களைந்தனர் நோய்யை விலக்கியே
நோயறு நெல்லை விதைக்கே டுழ்பீறார்
பெறுங்குணமுள்ள அரிசியே யேற்பது
பெண்மைப் புவனேசி மார்க்கமன்றோ!

59. நூறு நூருயிர் பூக்களைக் கொண்டே
நுழைவாயில் நின்றன்னை பேருரைத்தே
பேறு பெருகென அர்ச்சனை செய்தவர்
பொற்கும் புவனேசி மெய்யருளே!

60. நெய்யை உருக்குவர் பாலையும் காய்ச்சுவர்
நேயத்தா ளின்று நிவேதிப்பரே
ஐயை புவனேசி ஐந்தரு தானைந்தோடு
ஆனந்த மாகவே கொள்வதுண்டே!

61. நேற்றுப் பெருஞ்செல்வன் இன்று வறியவன்
நீர்வழி கண்ணோ டிரப்பதுண்டே
போற்றிப் புகழ்ந்து புவனேசி நாமங்கள்
புண்ணியம் வாழ உரையாமையால்!

62. நையு மனத்தர்முன் வெய்ய மொழிகளை
நாவினா லோதத் துணிந்தவரே
கையும் பயன்படார் காலும் பயன்படார்
காத்தருள் என்பர் புவனையையே!

63. நொய்யரிசிக் கூழை நூறு நாளுண்டவர்
நூறாயிரம் பணம் பெற்றபின்னர்
கையினால் ஒன்றும் பிறர்க்குக் கொடாரினிக்
கால மறியார் புவனேசியே!

64. நோயிறுக் கஞ்சியே மாளிகைக் குள்ளே
நுழைந்து கதவை அடைத்துவிட்டால்
மாயும் உயிருக்கு வாழ்வு பெருகுமோ
மாதா புவனை அருளிலதேல்!

65. நௌவிளை யேவிக் கடலிலே நீள்கொடி
நாட்டிய செல்வர் மறைந்துவிட்டார்.
கௌவிய எச்சிற் கலத்தையே நாயினம்
கரக்கவே விட்டார் புவனேசியே!

66. பண்பினில் மிக்கவர் நண்பிலு யர்ந்தவர்
பாரத நாடு படைத்ததுண்டே
மண்பெறு மாண்பி லன்னை புவனேசி
வாழும் தனியே சிறந்ததன்றே!

67. பாடல் பயின்றவர் பாடும் பணிசெய்க
பாதத்திற் பூக்களை வைப்பதுபோல்
ஆடல் பயின்றவர் ஆடும் பணியையே
அர்ப்பணம் செய்க புவனைமுன்னே!

68. பிறவிப் பயன்பெறப் பெட்பொரு தேவி
பிரசத்தி லாடப்புரிதல் நன்றே
இறவித் தொடர்பற அன்றும் அழியாத
இன்பம் புவனை அருளாவளே!

69. பீடு பொருந்திய வாழ்வினில் வாழ்வுறப்
பேணுக புவனை ஆலயமே
தேடு பொருளெலாம் தேவிக்கே ஆகெனச்
செப்பு மனத்துணி வுள்ளவரே!

70. புன்மை பொழியவே பொன்மை பெருகவே
போற்றுக தேவிபு வனைகழல்
இன்மை யொழியவே ஏற்றம் பெருகவே
என்றுமவள் துணை நின்றருள்வாள்!

71. பூக்கள் பறிப்பதும் பூசனை செய்வதும்
பூமியில் வந்த பிறவிநலம்
காக்க அருளாற் கருணைப் புவனேசி
கால்மலர் என்றும் நினைந்திடுவோம்!

72. பெண்ணின் பெருமையைப் பேசிய நாவினர்
பெற்ற விளக்கம் புவனேசுரி
கண்ணின் ஒளியிராற் காலைப் பணிந்தவர்
காணும் நலங்கள் நிரப்புவளே!

73. பேதை பெருஞ்செல்வம் உற்றால் அறிவின்றிப்
பித்துப் பிடித்தலைவா ளென்பரே
மேதை மிகுந்தவன் மிக்க சிறப்பினை
மேவ அருள்வாள் புவனேசியே!

74. பையுள் மிகுந்த பரிந்தாலும் நெஞ்சமே
பாத மலரில்வீழ் பூக்களெனச்
செய்யுள் இயற்றும் திருவுடை யன்பனாச்
சித்தம் விலகாள் புவனேசியே!

75. பொன்னினால் வெள்ளியாற் செம்பாற் சிலைசெய்து
பூசனை செய்ய விரும்புகின்றீர்
தன்னினை யில்லாத தாய்மைப் புவனேசி
தக்கவர் நெஞ்சில் விளங்குவளே!

76. போது மலரே அரும்பே தனிநிலை
பொற்பார் புவனேசி பூசனைக்கே
போதுமெனக் கோரா நெஞ்சுள அன்பனாய்
பூமியில் வாழ்விப்பாள் தேவிநன்றே!

77. பௌழியத் துள்ளும் தவவாகா ரத்திலும்
பாதம் வைத்தே விளையாடுகின்றாள்
பௌழியம் பாடச்செவி சாய்த்துக் கேட்கும்
பரிவின் அன்னை புவனேசியே!

78. மன்றத் திலாடும் பரமன் குறிப்பெலாம்
வாக்கால் விளக்கும் புவனேசுவரி
நன்றத்த ஆட்டமே என்று மகிழ்வோடு
நாட்டிய ஆடும் வாழிபுகல்வாய்!

79. மாமகள் வந்து மலர்க்கோயில் கொண்டனள்
வாணியே நாவில் விளங்குகின்றாள்
கோமகள் தேவி புவனேசி கூறிய
கொள்கையை நன்கு கடைப்பிடித்தே!

80. மின்னல் விளக்கம் அருளிய திபாரென
வேண்டி வினவும் தொழும்பரிடம்
நன்னல நாட்டும் அன்னை புவனேசியாம்
நாயகி யென்று விளம்புவமே!

81. மீகாம னாகவே கோடி யுலகமாம்
மேன்மை மரக்கலம் ஓட்டுகின்றாள்
வாகான தோற்றம் அமையும் புவனேசி
மக்கள் நலத்தை மனத்துவைத்தே!

82. முத்தியின் மார்க்கங்கள் எத்துணை யென்பதை
மோத மொழியாற் புவனேசுரி
சித்தி பலிக்கவே செப்புகின் றாளென்று
சித்தர் முனிவர் விளம்புவரே!

83. மூவா மருந்தினைத் தாயே தருகென்று
முன்னின் றிரக்கும் சிறுவரையே
தேவாதி தேவர் அழியாப் பெருநிலை
சேர்த்தருள் வாள்புவ னேசுரியே!

84. மெய்யம்மை நீயென்றே தேறும் புதல்வரை
மேருவரைக்கே, அழைத்த ருள்வாய்
பொய்யம்மை பாலைப் பருகாத வண்ணம்
புவனேசி யாண்டருள் செய்வதுண்டே!

85. மேரு மலைமேல் விளையாடும் பாதம்
விழைந்து பணிந்த மெய்யன்பருக்கே
நேரும் நலமென்று நேரில் உரைப்பவள்
நெஞ்சம் குடிகொள் புவனேசியே!

86. மையல் மனத்தைக் கசப்புறச் செய்தும்
மயங்கி அதன்க ணகப்படுவார்
செய்ய திருவடி யேத்திப் புவனை
திருத்தணி சேர்ந்து நலம்பெறலாம்!

87. மொய்க்கும் இறகுள ஈக்களைப் போலவே
முற்றும் உலக மயக்கத்திலே
கைக்கும் சுகத்தையே நாடிய நெஞ்சத்தைக்
காலால் மிதிப்பள் புவனேசியே!

88. மோதும் அலைகடல் வீழ்ந்து முழுகியும்
முன்புறம் நோக்கிப் புவனேசியின்
பாதமலர்த் துணை பற்றாத நெஞ்சினைப்
பார்த்தவள் இன்றும் சிரிப்பதுண்டே!

89. மௌவல் துழாய் வில்வம் மல்லிகை தாழைகள்
வந்து புவனை திருவடிமேல்
வெளவு வினைப்பொரு வீழ்வன போலவே
மானிடர் அர்ச்சனை செய்வதுண்டே!

90. வந்திரம் வேண்டுமோ தந்திரம் வேண்டுமோ
எம்பெரு மாட்டியருள் பெறவே
மந்திரம் வேண்டுமோ வாக்கு மனத்திலே
வந்து புவனை விளங்குவளே!

91. யாணர்த் தவிசில் இயல்பா யமர்ந்தே
எண்ணிலா அண்டம் புரக்குமவள்
காணக் கிடையாத காட்சியோ எண்ணக்
கருதார் புவனை தொழும்பர்களே!

92. யுக்தியும் வேண்டுமோ யோகமும் வேண்டுமோ
யோகேசி பாதம் பணிவதற்கே
பக்தியெனும் பெரும் பாவனை உள்ளதேல்
பார்த்து மகிழ்வாள் புவனேசியே!

93. யூகம் மிகுந்தவர் யோகம் அறிந்தவர்
யோகினி ஆயிரர் சூழ்ந்துவமே
ஏகம்பரம் பொருள் ஆள புவனேசி
எங்கிருப் பாள்என்று தேருவரே!

94. யோத்தா சிரோமணி யாசிய விரலும்
யோச்சிய பக்தி இலாதிருந்தால்
மாத்தா மரைமலர்ப் பாதம் புவனேசி
வாயிலில் நிற்க வழக்கில்லையே!

95. யெளகந்த ராபனன் போன்ற அமைச்சனும்
யாயிவன் என்று தெளியாவிடின்
மெளகம் பிரியாத வாயிள னாகவே
வாழ்வள் புவனேசி ஆணையிதே!

96. வன்மை எனக்கிலை வரக்கு மனத்தில்
வருவிக்கு மந்திர சக்தியிலை
தன்மை அறிந்தருள் தாயே எனச்சொலின்
தாய்மை விளக்கும் புவனேசியே!

97. வாதத் திறமையால் ஓதும் கலைகளால்
வந்தருள் வாளோ புவனேசுரி
வேதத்தை முற்றும் கரைத்துக் குடித்தாலும்
மெய்யருள் இன்றெனில் இல்லையன்றே!

98. விழிகள் பலகோடி மேருமலை யுச்சி
மேவும் புவனை திருமேனியில்
வழிகள் தெரிந்தவர் அல்கும் அவளருள்
வாய்க்க முயல்வர் மனத்துணிவால்!

99. வீடு தருகென்று வேண்டியூறாற் போதுமோ
மெய்யறி வின்னதென் றெண்ணாமலே
பாடு படாமற் பயிரும் விளையுமோ
பாரிற் புவனை விழியாமலே!

100. வெட்ட வெளியிலே மெய்ப்பொருள் உண்டுனை
வேதமே சொல்லிவிரித்த தென்றால்
இட்ட மிருந்தவர் தேடி அடைவதற்
கென்ன தடைபுவ னாம்பிகையே!

101. வேதா திகாரம் எமக்கிலை யாதலால்
மேரு முடியுரை தேவதையின்
போதா திகாரம் இலையெனச் சொல்லாள்
புவன மனைத்தும் உடையவளே!

102. வையம் பலகோடி வாழ அரசியல்
வைத்த புவன பரமேசுரி
ஐயம் இலாமலே நம்முடை நெஞ்சம்
அடங்கி யிருந்தே அருளாவளே!

103. வெளவால் மறையும் குகையிலை தேவி
மகிழ்விற் வாழும் திருக்கோயிலே
எவ்வாறு நோக்கிலும் எங்கும் இருப்பாள்
இதயம் மலர்த்தும் புவனேசியே!

104. போக்கு வரவிலாப் புண்ணிய பூமி
புவனேசி பாதமலர் நிழலே
வாக்கு மனமும் செயலும் இறைவிக்கே
வைத்தவர் ஆளும் அரசதுவே!

105. பௌவம் உளதொன்று பேரின்ப வெள்ளம்
பரந்தது தாய் புவனேசியருள்
செவ்வையின் வாய்த்தவர் நிந்தலாமங் கென்று
செப்புவர் மெய்யறி வுள்ளவரே!

106. நைவளம் செவ்வழி பாடி அன்னை
நண்ணுக நெஞ்சிலென் நெண்ணுவார் கோடி
கைவளம் ஓவியம் சிற்பம் – புவனை
காணவே செய்தது காணுமே கற்பம்!

# 3. புவனேசுவரி அம்மானை

தமிழிலக்கியப் பூஞ்சோலையில் பலவகையான இலக்கிய மலர்கள் உருவாக்கப் பெற்றுப் பலவிடங்களில் சிதறிக் கிடக்கின்றன. அவற்றுள் ஒன்று அம்மானை. அம்மானை நாட்டுப்புறப் பாடல் வகைகளுள் ஒன்று.

உலக இலக்கியங்கள் அனைத்திலும் நாட்டுப்புற இலக்கியம், செவ்விலக்கியம் என்ற இரு பிரிவு உண்டு. நாட்டுப்புற இலக்கியம் என்பது இசையுடன் கூடிய வாய்மொழிப் பாடல்களைக் குறிக்கும். செவ்விலக்கியம் இலக்கண வரையறைக்கு உட்பட்டதாகும். நாட்டுப்புற இலக்கியமே எல்லா மொழிகளிலும் முதலில் தோன்றியிருக்க வேண்டும் என்பது அறிஞர் கண்ட முடிவாகும். அதன் பின்னரே செவ்விலக்கியங்கள் தோற்றம் பெற்றன. நாட்டுப்புற இலக்கியம் செவ்விலக்கியமாக மாற்றம் பெறுவதுண்டு. நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றி ஆராய்ந்த திரு. உ.வே. சாமிநாதய்யர் ஐம்பத்திரண்டு வகை நாட்டுப்புறப் பாடல்களில் 'அம்மானை'யையும் குறிப்பர். நாட்டுப்புறப் பாடல்கள் கட்டுப்பாடற்ற கற்பனைக் கருவூலங்கள்; சமுதாயத்தின் உயிர்த்துடிப்புகள்; இசை கலந்த எழுதா ஓவியங்களாகும்.

> "நாட்டுப்புறப் பாடல்களில் சிறப்பான இடத்தைப் பெறுவது அம்மானைப் பாட்டு என்னும் கலைப்பாடல் மேனாட்டில் அறிஞர் பலர் இதனைத் தெளிவாக ஆய்ந்து வரையறுத்துள்ளனர்".

(இராசாராம். த. தமிழில் அம்மானைப் பாடல்கள். ப.11)

அம்மானைப் பாடல்கள் இலக்கிய வடிவில் அமைந்த நாட்டுப்புறக் கதைப் பாடலாகும். இஃது எளிமையான நடையில் அமைந்து எதுகை, மோனை சந்த நயங்களுடன் அமைந்திருக்கும். இவை ஒரு கதையையோ, வரலாற்றையோ மையமாக வைத்துத் தொடர்ந்து செய்யுள் வடிவில் அமைத்துப் பாடப்படும் கதைப்பாடலாகும்.

**அம்மானை-சொல்லாட்சி**

சங்க இலக்கியத்தில் அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு போன்றவற்றில் கழங்காடல் பற்றிய செய்தி பயின்றபோதிலும் அம்மானை என்ற சொல் வழக்கு இல்லை. சிலப்பதிகாரம் அம்மானை வரிப் பாடல்களைப் பற்றிப் பேசுகிறது. “சிலப்பதிகாரம் அம்மானை வரிப்பாடல்களைத் தருவதுடன் இச்சொல்லின் முதல் ஆட்சியையும் அளிக்கிறது” என்பர் ச.வே. சுப்பிரமணியன். (தமிழிலக்கிய வகையும் வடிவும், ச.வே. சுப்பிரமணியன், ப. 477)

**அம்மானை-சொற்பொருள்**

அம்மானை என்பதற்குத் ‘தாய்’ என்று அகராதி பொருள் கூறுகிறது. அம்மானை என்ற சொல்லுக்குப் பிங்கல நிகண்டு அம்மானை என்ற பொருளைத் தருகிறது. “அம்மானை என்பது தாய் என்ற பொருளை உடையது. பெண்களைப் பொதுவாக அம்மா என்று அழைப்பது போல் ‘அம்மானை’ என்று அழைப்பதும் இலக்கிய மரபு” என்று கலைக்களஞ்சியம் சுட்டுகிறது.

அம்மானை என்ற சொல் அம்+மனை என்ற இரு சொற்களால் ஆனது. எனவே அழகிய மனையின் கண்ணே இருந்தாடிய ஆட்டம் என்பதால் அம்மானை என்று பெயர் பெற்றிருக்க வேண்டும். அம்மானை என்ற சொல்லானது பெண்கள் விளையாடும் விளையாட்டைக் குறித்து நின்ற நிலை மாறி காலப்போக்கில் சிற்சில மாறுதல்களைப் பெற்றுப் பின்னாளில்

எளிய நடையில் அமைந்த கதைப்பாடலாக உருவெடுத்துள்ளது. எனினும் நாளடைவில் அம்மானைப் பாடல் என்பது கதைப்பாடலின் வேற்றுப் பெயராகவே நிலைத்துவிட்டதை நாம் இலக்கிய வரலாற்றில் அறிய முடிகின்றது.

## அம்மானை-இலக்கணம்

அம்மானையின் இலக்கணம் பற்றித் தொல்காப்பியத்தில் எக்குறிப்பும் இல்லை. அவர் கூறும் பண்ணத்தி, பிசி ஆகியவற்றுக்கான இலக்கணம் நாட்டுப்புறப் பாடல்களுக்கு உரியன என்று உரையாசிரியர்கள் கருதுகின்றனர். அம்மானைப் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல் வகையினில் வளர்ந்த இலக்கியமாக உள்ளதால் பண்ணத்தியை அம்மானைப் பாடல்களுக்கும் பொருத்திக்காட்ட முடிகிறது.

பாட்டியல் நூல்கள் அம்மானைக்கு இலக்கணம் கூறவில்லை. அறுவகை இலக்கணம் தந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அம்மானைக்கு,

"இரண்டு நாலைந் தெனுமடி ஈற்றில்
தன்பெயர் குலவத் தக்க அம்மானை
ஐந்தடிக் கலிப்பா போலும், அதனிடை
சொல்லலும் மறுத்தலும் விடையும் தானே
கூறினர் பற்பலர் குவலயத் திடத்தே" (யாப்பு -29)

என்றும் அம்மானை இலக்கியத்திற்குத் தெளிவாகவும் வரையறை யாகவும் இலக்கணம் கண்டவர் ஆவார். இவர் தம் காலத்தில் அம்மானை இலக்கியங்கள் பேரளவிற்கு அச்சிடப்பெற்று வெளிவந்தன. அவ்வளர்ச் சியைக் கண்ட தண்டபாணி சுவாமிகள், வாய்மொழி இலக்கியமான அம்மானையைக் கற்றோர் போற்றும் இலக்கிய வகையாக ஏற்றுத் தான்பாடிய இலக்கண நூலில் அதன் இயல்பை விளக்கினார்.

## அம்மானையின் தோற்றம்

தமிழிலக்கியத்தில் கிடைத்துள்ள அம்மானையின் தோற்றத்தைச் சிலப்பதிகார வரிப்பாடல் மூலம் இன்று அறிந்துகொள்ள முடிகிறது. இதுவே இன்று கிடைத்துள்ள பழமையான அம்மானை வரிப்பாடலாகும். தமிழில் முதலில் அம்மானைப் பாடலைப் பாடியவர் புகழேந்திப் புலவர் என்று கருதுகின்றனர். ‘‘அம்மானைப் பாடல்களின் ஆதிகருத்தா புகழேந்திப் புலவர் ஆவர் என்பது செவிவழிச் செய்தி. விநோதரச மஞ்சரியில் அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார் இந்த செவிவழிச் செய்தியைத் தெரிவித்திருக்கிறார்.’’ (மு. சண்முகம் பிள்ளை, சிற்றிலக்கிய வகைகள், பக்.148-149) பழமொழியை முதலில் சொன்னவர் யார் என்று தெரியாதது போலவே அம்மானைப் பாடல்களை முதலில் பாடியவர் யார் என்றும் அறுதியிட்டுக் கூற முடியாது.

அம்மானை பிற்காலத்தில் கலம்பக உறுப்புகளில் ஒன்றாக அமைந்தது. அது சிலப்பதிகார அம்மானை யாப்பையே கொண்டாலும் சில புதிய மரபுகளைக் கண்டு வளமுற்றது. தடைவிடைகளாகவும், சிலேடை முதலிய அணிநயம் பெற்றதாகவும், சொல்லின்பம் மிக்கதாகவும் உருக்கொண்டது. வெண்டளையில் சற்றே விலக்குப் பெற்று வருதலையும் மேற்கொண்டது.

இவ்வாறு வளர்ந்து வந்த அம்மானைப்பாடல், பத்தொன்பதாம் இருபதாம் நூற்றாண்டளவில் நூலுருக் கொண்டு வளர்வதாயிற்று.

அச்சுக்கலை ஏறத்தாழ கி.பி. 16-ஆம் நூற்றாண்டளவில் தமிழகத்திற்கு வந்தது. அதற்கு முன்னர் ஓலைச்சுவடிகளே நூல்களாக விளங்கின. அச்சுக்கலை தமிழகத்திற்கு நுழைந்ததன் வாயிலாகச் சுவடிகள் பல அச்சு வடிவம் பெற்று நூலாகி வருகின்றன. இருப்பினும் எண்ணற்ற இலக்கியங்கள் இன்னும் சுவடிளாகவே உள்ளன.

அச்சில் வெளிவராது சுவடிகளிலேயே இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கும் இலக்கியங்களுள் மருத்துவத்திற்கு அடுத்து மிகுதியாக விளங்குவது சிற்றிலக்கியங்களும் கதைப் பாடல்களுமாகும்.அவ்வகையில் அம்மானையும் ஒன்று. அந்நெறியிலேயே ''புவனேசுவரி அம்மானை'' என்ற இச்சுவடி இதுவரை அச்சில் வெளிவராததாக விளங்குவதோடு நாட்டுப்புறச் சாயல் அமைந்த 'அம்மானை' என்ற அமைப்பிலும் விளங்குகின்றது. அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் சு-8223 என்ற எண்ணிட்ட இச்சுவடி நூல் அம்மானை இலக்கிய வரிசையில் கூடுதலாக புதிதாக அச்சுலகிற்கு நுழைகின்றது.

# புவனேசுவரி அம்மானை

## காப்பு

மாணிக்க வாசகனார் வாக்கில் அமைந்தது போல்
ஆணிப்பொன் மாமலைவாழ் அம்பிகைக்கு – கரணிக்கே
பொற்பதம் காட்டும் புவனவல்லிக் கம்மானை
கற்பகமே நின்று வழிகாட்டு.

## நூல்

பெண்மணியே கேளாய் பெருமை பிறப்பிடமாய்
உண்மையொளி யோங்கும் உருவாய் உயர்வணைத்தும்
அண்மையிலே யெய்த அரசாள் புவனவல்லி
கண்மணியே போலண்டம் காக்கும் கருணையிளோ
விண்மணிகள் கண்ணாய் விளங்கும் திருமுகத்தாள்
நுண்மையொளிர் வேதம் நுழைந்து வெளிப்படுவாள்
எண்மை யனைத்தும் இயைந்த அருமையினாள்
வண்மை நினைத்து வழுத்துதுமே அம்மானாய் (1)

இருக்கு முடியேறி யிலங்கும் தனிரடியாள்
சுருக்கிய பாத்தியம் அன்பர்தா வேற்றருள்வாள்
பெருக்கும் திருவருளே மெய்யும் திருவிழியாள்
மருக்கொள் மலர்மாலை வாய்த்ததிரு மார்பகத்தாள்
உருக்கொண் டெழுந்த ஒளியாம் புவனேசி
சுருக்கண் டாலைக் கடலுள் அழுந்தாமே
தருக்கின்றி யேத்தும் தகுந்தவளாகக் காத்தருள்வாள்
வருக்கம் புகழ்ந்து வாழ்த்துதுமே அம்மானாய் (2)

எல்லா உலகமும் என்னுடைமை யென்றள்ளாள்
கல்லார் மனத்தும் கனிவோடு வீற்றிருப்பாள்
நல்லார் பணியே நயந்த திருக்கோயிலுளாள்
செல்லார் மழையிற் சிறக்கும் கருணையிலே
பொல்லாத பிள்ளை புகழ்ந்தேத்த முன்னிற்பாள்
சொல்லால் அளப்பரிய தூய்மைப் புவனேசி
வில்லார் நுதலின் விளக்கம் விளக்கவலாள்
வல்லார் வணங்குறளை வாழ்த்துதும் யாம் அம்மானாய் (3)

அண்டம் பலகோடி ஆண்டருளும் பேரரசி
கண்டம் கறுத்த கடவுளுக் காற்றலாய்
பண்டம் கனகமலை பாலிக்கும் பூணுலாய்
அண்டர் முனிவர் அடிபணியும் அன்னைநினைக்
கண்ட இனமும் கருதும் இனமுமாம்
தொண்டர் குழிஇய ரிலம்தோன்றும் ஒளிவிளக்கே
மண்டலம் வேண்டா வனப்புப் புவனவல்லி
கொண்ட கருத்தைக் குறிப்போம்யாம் அம்மானாய் (4)

வேண்டுதல் வேண்டாமை மேவாத பேரரசி
ஆண்டருள் பல்கோடி அண்டத் ததியையே
நீண்டு விளங்கியருள் நீலவிழிச் செல்வி
தூண்டுதல் வேண்டாத தூய சுடரொளியே
பூண்டகலன் நன்றே பொலிய அருள்புரிவாய்
பாண்டவரை நன்கு பரித்த பராபரையே
காண்டகைய கோலம் கனிந்த புவனவல்லி
யாண்டுமுள தாயே இறைஞ்சுதும்யாம் அம்மானாய் (5)

மறைமுடியில் வீற்றிருக்கும் மாதரசி ஆவாய்
மொறைமலியும் மாதவத்தர் போற்றிமகிழ் தேவி
நிறைவளரு நெஞ்சகத்து நேயமலி பெண்டிர்
இறைமையுள நின்னிருக்கை எய்தியியல் தொண்டில்
நிறைவுரை வேண்டிநிற்கும் நேர்மையறி வாயே
பொறைமலியு முன்னப் புவனேசி யன்னே
கறைபடரு நெஞ்சத்தெம் கால்பற்ற வந்தேம்
பறைமுடில்க நின்புகழே பாருதுங்கா ணம்மானாய் (6)

பாடல்வல சான்றோர் பரிவுமிகப் பாடுகின்றார்
ஆடல்வல பெண்டிர் அழகுமிக ஆடுகின்றார்
சூடல்வல பூக்கள் தொடுப்பார் தொடுக்கின்றார்
தேடல்வல நெஞ்சத்தார் தேடி யடைகின்றார்
ஓடல்வல ஐம்பொறியு மோடா தொடுக்கியவன்
நீடல்வல நின்றுவேய நெஞ்சில் நிறுத்துகின்றார்
கோடல்வல தாயே குணஞ்சால் புவனேசி
வாடல்வல வாழ்வகன்று மேவுதும் காணம்மானாய் (7)

அன்னாய் அடியேம் அகத்தே புகவிழையும்
நின்னால் அடையா நிலையும் உளதேயோ
பொன்னால் அரிய புலமைசால் போகத்தால்
மன்னா வுலகை மறந்து நினைப்பற்ற
நன்னாள் எனவே நயந்தின்று காட்சிதர
முன்னா வருக முதல்வியே வந்தருள்க
பின்னா மொளியின்மிகு மெய்யாய் புவனேசி
மன்னாடும் கரம்பதனைப் பாடுவமே அம்மானாய் (8)

மைப்படியும் கண்ணாள் மலர்படியும் மேனியாள்
செப்படியில் வித்தையெனச் செய்யும் படைப்பினாள்
ஒப்பாடியில் நில்லாத உண்மைச் சிறப்புடையாள்
இப்படியள் இந்நிறத்தள் இவ்வண்ணத் தாளெனவே
மெய்ப்பதவம் தேர்ந்து விளக்கினரைக் காணாதாள்
பொற்படியி லேறிப் புதுவைத் திருக்கோயில்
இப்படியில் வாழ இருந்த புவனேசி
அப்படிவம் போற்றி அகம் வைப்போம் அம்மானாய் (9)

சாமவிசை கேட்கச் சலியாத் திருச்செவியாள்
காமகலை யுச்சிக் கருத்தாம் விளங்குமவள்
ஓம்பியல் வேள்விகளில் ஒப்பிலா வேட்கையால்
தூம்மெழு வேதி சுடரவே விற்றிருப்பாள்
நாமமவை ஆயிரமும் நன்மைபெற வோதுபவர்
ஏமமுறச் செய்யும் இதயப் புவனேசி
பூமகளும் நாமகரம் போற்றப் புதுவைநகர்
நேமமுற வீற்றிருக்க நேர்ந்தனள்கா ணம்மானாய் (10)

# 4. புவனேசுவரி அலங்காரம்

**அலங்காரம்**

அலங்காரம் என்பது ஒப்பனை செய்தல் என்பதாகும். அழகு செய்தல் எனும் ஒப்பனையை உடை, அணிகலன்கள், பல வண்ணம் மற்றும் மணம் நிரம்பியச் சாந்துகளின் மூலம் அலங்காரம் செய்யப்படுகிறது. தெய்வங்களின் அவதாரங்களுக்கு ஏற்ப அலங்காரம் செய்யப்படுகிறது. அலங்காரத்தின் மூலம் மெய்ப்பாட்டுணர்வை அறியமுடியும். தெய்வங்களின் அலங்காரத்தைக் கொண்டே கோபம், நகை சாந்தம் , கலக்கம் போன்றவற்றை அறிய இயலும். இது போன்று உள்ள உணர்வுகளை வெளிப்படுத்துவது அலங்காரம் ஆகும். புவனேசுவரி அம்மனின் உடை மற்றும் அணிகலன்கள், உணவுப் பொருள்கள், பழங்கள், வாசனைச் சாந்துகள் போன்றவற்றின் மூலம் அலங்காரம் செய்யப் படுகின்றது. அவற்றைக் காணும் போது புவனேசுவரியின் அவதாரத்தினையும் அவதார நோக்கத்தினையும் அறிய இயலும். மேலும் அதனை அழகு படுத்தும் வகையில் பாக்களால் அலங்காரம் செய்துள்ளார். புவனேசியின் அலங் காரங்களைக் கண்டு மனம் குளிர்ந்து அந்தந்த அலங்காரத்தின் தன்மையையும் அவற்றின் வெளிப்பாடுகளையும் பாடியுள்ளார். புவனேசுவரி அலங்காரம் எனும் இப்பாக்களைப் பாடி புவனசுவரி அம்மனுக்கு பா அலங்காரம் செய்து நா. கனக ராஜையர் தம் உள்ளத்துணர்வை வெளிப்படுத்தியுள்ளார்.

## காப்பு

புதுவைப் புவனேசி பூங்கழல் போற்றும் புதுப்பனுவல்
மதுவைப் பொழிய வமுதைச் சுரக்க வகுத்துகாண்
ஷிதுவைச் சடைமிசை வைத்த பிராணருள் வேழமுகன்
இதுவைத்தி யென்ன மொழித்தந்து நிற்கும் இயற்கையினே

## பயன்

நிலங்காவல் பூண்டவர் தம்மினு மிக்க நிலைபெறுவர்
நலங்காணும் பேரின்ப வாழ்விலு மோங்குயர் நாமனத்து
விலங்காமல் அன்பிற் புவனேசி பாத வினல்கலைக்கும்
அலங்கார மாலிகை கண்டத்தி லேந்தும் அறிவினரே

## நூல்

மூலப் பொருளை முதன்மைப் பொருளை முழுப்பொருளை
காலப் பொருளைக் கணக்கில் பொருளைக் கருப்பொருளை
தூலப் பொருளை நல்ஆக்கப் பொருளைத் துணைபொருளைச்
சீலப் பொருளைப் புவனேசி யென்பர் தெளிந்தவரே (1)

புவனேசி யென்றே புகல்கோ புராணம் புகழ்பெருமைத்
தவனேசி யென்று மொழிகோ தவத்தின் தலைமைபெறு
சிவனேசி யென்று பகர்கோ புதுவைத் திருத்தணியாம்
பவனேசி தன்னைப் பணிவாள் படர்ந்த பரிணதர்க்கே (2)

யாருந் தெளிதற் கரியாளை யோகி யிதயத்துளே
சேரும் திறத்துப் பெரியாளை யோவியம் சிற்பமென
ஆரும் கலைகட் குரியாளை ஞாலத்தை யாண்டாளைப்
பாரும் தெளியும் கருத்துட் பதியுங்கள் பாவிலிதே (3)

மண்பால் வருபவர் தந்தம் அறிவால் மதித்தறிந்து
பெண்பா லிழிவையும் ஆண்பா லுயர்வையும் பேசுவதே
கண்பால் அருள்வளர் தேவேசி பாத கதுவியபின்
பெண்பால் உயரும் புவனேசி யென்றனப் பேனுவதே (4)

கண்ணாற் செவியாற் கருத்தாள் மறைமுடிக் கல்வியினால்
எண்ணாற் புலமைச் சிறப்பா லறியா வியப்புண்டாம்
மண்ணாற் புனைந்தவர் நெஞ்சம் புகுந்து பரவுநளை
அண்ணாத் தலைமை நிலையா புவனேசி யாணையிளே (5)

வெள்ளாற் றருகே புதுவைத் தமிழர் வியன்றலத்தில்
உள்ளாட் கருளே யுருவெடுத் தாளுக் குவமைகோலக்
கள்ளாற் குழைத்த கவிதை யியற்றும் கபரருக்கும்
எள்ளாக் கலையோல் நூலோர்க்கும் சிறப்பிக்கும் ஏற்பதன்றே (6)

கச்சை யணிந்த தனத்தாள் உலகம் கணக்கறவே
இச்சை யெழும்பப் படைத்தாளும் செல்வி இதயமலர்
வச்சை யிலாத தனியெனக் கொண்ட மதுரவல்லி
பிச்சை யெடுப்பவள் போற்றும் புவனேசி பெண்ணணங்கே (7)

எல்லோர்க்கும் எல்லாம் எளிதிண்மை கண்டேன் எழிலுருவென
கல்லோ சீழியோ கவிதைத் தனியோ கனிவுபெற
வல்லோர் எனவே வனைவார் சிலருளர் மற்றவரோ
சொல்லோர் பொருளிற் புவனேசி மாண்பு சொலுமவதே (8)

வேண்டா வெறுப்பாற் றுறவறம் புக்க விரதர்களும்
தூண்டா விளக்கைச் சுடரோ வியத்தினைத் தூய்மைபிறர்
சேண்டாள் விளங்கும் புவனேசி பாதத் திருமலரை
நாண்டாள் மறந்து தலைமேல் லிறுத்திடிப்பதுண்டே (9)

தனக் கலங்காரம் புரிந்தே பயின்ற தனிமகளும்
எனக் கலங்காரம் பயனின்மை கண்டே னெனத்துணிந்து
நினக் கலங்காரம் புரியப் புவனேசி நின்விழியால்
மனக் கலங்காரம் தனது ருவாக்கி வயங்குதியே (10)

நெல்லைப் படைத்தவர் நெல்லிலும் காணும் சீமலையென
மல்லைப் படைத்தவர் மல்லிலுட் காணும் மதுரையென
வில்லைப் படைத்தவர் வில்லிற் காணும் விம்பவெனச்
சொல்லைப் படைத்தவர் புவனேசி மாண்பினைச் சொல்லுவரே (11)

தேன் காதலிப்பவர் தேன்மழை பெய்வர் திருமலை மேல்
வான் காதலிப்பவர் வான்யாற்று நிரை வழங்கும்காண்
மீன் காதலிக்கும் விழியாய் கருப்புவில் மெல்லியலே
யான் காதலிப்ப புவனேசி நின்முன் இருமையுமே (12)

பொன்றாது நிற்கும் புகழ்வேட்டு நல்லுயிர் போக்குநரை
நின்றாள் பணியும் நிலைக்கே யழைக்கும் நிலையுடையார்
கன்றா லுருகும் கபிலையை வெல்லும் கருணைசொலி
ஒன்றா லுருக்குவர் செல்வர் புவனேசி யொப்பிலியே (13)

நெருநற் பிறந்தவர் இன்றைக் கிருத்தல் நிலையில்லைகாண்
பொருநற் படையேந்தி வாழ்ந்த நிருபரும் பொன்றினாரல்
ஒருநற் பொருள்தேற நெஞ்ச முளாரை யுவந்தருளி
இருநற் பொருளைப் புவனேசி நாவில் எழுதுவளே (14)

செம்மாண் டணிக்கோல் பலகோடி யண்டம் செலுத்துகின்ற
மைம்மாண் விழிகொள் பெருமாட்டி மூவர் வணங்குகழற்
கைம்மாண் கொடையாட்டி காலக் கணக்கைக் கடந்து நிற்பாள்
எம்மாண் கடவுண்மைச் செல்வி புவனேசி யென்றிநெஞ்சே (15)

கூலம் பகருநர் மாணிக்க மாண்பு குணிப்பதுண்டோ
ஞாலம் பெரிதென்று மாழ்குநர் தேவி நனிளபத
சீலம் தெளிந்து மதிப்ப தின்றேனும் திருவருளை
காலம் கடந்த புவனேசி நல்கும் கடைக்கணிளே (16)

எல்லாம் அறிபவள் எல்லாம் இயற்றும் இயல்வலியாள்
எல்லா நிலத்தும் இறைமை செலுத்தும் எழிலரசி
நல்லார் மனத்தே நடிப்பது போல நலனறியாப்
புல்லார் மனத்தும் புகுவாள் விரைவாள் புறப்படவோ (17)

சோலைக் குயிலுக்கு நல்லிசைச் செல்வம் படரவைத்த
சேலைப் பழித்த விழியாளை முத்தேவர் தெய்வதத்தை
மாலைத் தனிறை மலரினைத் தாங்கிய மாண்புறுசெங்
கோலைப் பிடித்த புவனேசி தன்னைக் குறிக்கொள்வமே (18)

விண்டு எடுத்த அவதாரம் பத்தும் விரல்நகத்தில்
கண்டு களிக்கும் தளிர்பதம் கொண்ட கருணைவல்லி
பண்டு புரந்தாள் தேறப் பிரமப் பரிசுரைத்தாள்
தொண்டு விழைந்தே புவனேசி வேடத்திற் றோன்றுவளே (19)

ஆலாலம் உண்டான் இறைவன் மார்க் கருள்விளக்கிக்
கீலால மேற்றளள் வேணி புவிமேற் சினரருளால்
நீலாளகம் கொண்ட தேவி புவனேசி நீள்விழியால்
ஞாலாதி யண்டங்கள் ஆயிர கோடிக்கு நல்குவளே (20)

சொல்லிற் படாத பொருளை விளக்கும் அருதிமுடி
எல்லிற் பொலியும் திருவடி யாளை இறைமையினால்
அல்லிற் பொலியும் குழலாள் மகளிர் அனவதிகர்
புல்லிறு பணிபூண் புவனே சுவரியைப் போற்றுவமே (21)

மேருவி னுச்சிசு மேருவின் மாமுடி மேலிருப்பாள்
ஊருவின் மேலுறை மேகலை யுன்னாறை யொன்மணியாய்
சீ ரு றெவள வுலகங்கள் கோடி செறிய வைப்பாள்
பூருவர் தேற்றும் புவனேசி தொண்டைப் புதுவையளே (22)

அண்ட ரைக்காக்கும் கருத்தால் அமருக் கடைவலிய
சண்டளை முண்டளை வேலிவிற ருக்கும் சதிருடையாள்
விண்டலம் காணா வமுதத்தை யொம்பிவ் விழும்பொருளை
மண்டலம் காண வருளும் புவனேசி வன்மை பெண்ணே (23)

பந்தத் தழுத்திப் பணிவிக்கும் வெவ்வினைப் பாசமறுத்
தந்தத் தமரரு மெய்தாப் பெருநிலை யாரருளால்
முந்தத் தருமெம் புவனேசி பாத முளரிலிலே
சிந்தப் பெறுதேன் அடியார் சிரத்தைச் சிறப்பிக்குமே (24)

தொண்டா யமைந்து பணியே புரியும் சுகசலதி
கண்டார் சிலரே யுலகினிற் காணார் கணக்கிலரே
அண்டா தியரும் அறியாப் பொருள்யா மறியவருள்
கண்டாள் பதமலர் தேடித் தெளிக்க களிக்குநெஞ்சே (25)

ஈவாரை யில்லா வுலகினில் அந்தோ இரந்தனையே
நாவா லுறுத்தரை வள்ளல ரென்று நவின்றனையே
தேவாதி தேவர் பணிபுவனேசி திருவடி மேல்
ஓவாது பாவோடு பூச்சொரி பேற்றை யுணர்சிலையே (26)

நொய்ந்தோர் துயரத்தை நோக்காழ் களையு மெய்ந் நோன்புடையாள்
வந்தோர் வழுத்துமுன் வாரி வழங்குறும் வண்மையினாள்
இந்தோ கதிரோ விழியா யமைந்த இறைமையினாள்
பிந்தோம் இனியும் புவனேசி பாதம் பிடிப்பதற்கே (27)

பற்றற்ற யோகியர் ஞானியர் போற்றும் பராபரைகாண்
கற்றற் குரிய கலைகளை நல்கும் கருணையாள்காண்
நிற்றற் குரிய மெய்ப்பேற்றைப் புதுவைநிலத்து வந்து
முற்றத் தருளும் புவனேசி சீர்த்தி முழங்குமினே (28)

எங்கோ விருந்த விழலலைத் தன்பா லிழுத்தருளிச்
செங்கேழ் விளங்கும் திருற ருக்காட்டிச் சிறைப்படுத்தும்
கொங்கே கமழும் குழலாள் புவனேசி கோவிலினில்
பங்கே குகமன் மங்கையர் நின்று பணிசெய்வரே (29)

நாவிற் புகுந்து மொழிகளை நல்கும் நலமென்னையே
பூவிற் புகுந்து பொலிவை விளக்கும் புகழென்னையே
தேவிற் புகுந்து வரங்களை நல்கும் திறமென்னையே
கோவிற் புகுந்து நின்று புவனேசி குணக்கடலே (30)

அறியாய் மனமே புவனேசி மெய்ய ருளாற்றலினை
பிறியாய் பொறிகள் இழுக்கும் வழிச்செலும் பேதமையை
நெறியாய் நெறிமேல் நிலையாய் இருக்கும் நிமலையினைக்
குறியாய் படராய் இழிந்தாய் புவியுறு குப்பையிளே (31)

பொய்க்காதல் உள்ளே புகுந்து வகுத்து பொறிபுலனை
மெய்க்காதல் எம்பெரு மாட்டி திருவடி மேவுமன்பு
சைக்காதல் வேண்டாத் தனிக்காதல் பூணும் தவநெறியைப்
புக்காதல் வாழ்த்தி புவனேசி தாளென்று போதிப்பமோ (32)

அறிவாற் பெறும்மேற் களைத்து மருளாம் அனையவள்காண்
செறிவாற் செறிந்து தெளிவாற் றெளியும் சிலையவள்காண்
பொறியாற் புலனாற் கதுவாம் புவனேசி பூமகள்காண்
வெறியாற் சினமும் மலர்மாலை தோள்மேல் விலைந்தவே (33)

சொல்லுக் கடங்காப் பொருளென் றிறைவியைச் சொல்வதுண்டு
கல்லுக் கடங்காத சிற்பம் இழிபெறும் கட்டடங்கா
எல்லுக் கிணையில் திருவோவிய மென்றியம் புவள்யான்
வில்லுக் கிடந்தருந் தோள்கொள் புவனேசி மேனியையே (34)

அவள்கரு ணைக்கட லென்பேன் அருள்பொழி ஆணையினால்
இவள்திறம் யாறுணர் வண்ணம் அருகினில் எய்தியுளாள்
உவள்மறை யாயிரம் பாடிப் புனையா ஒருத்தி கண்டீர்
எவள்புகல் கேள்ளிற் புவனேசி யென்றே இயம்புவளே (35)

காரண மூலமெனநின்று காரியம் காட்டுகின்றாள்
ஆரண மூலம் தனாது பெருமை அறிவுறுத்தி
நாரண னான்முகன் முக்கணன் போற்றும் நளினபதம்
பூரண பரணர்தம் யாம்பெற வீயும் புவனையன்றே (36)

மொள்ளற் சிறுகுடில் தந்தெம்மை யாங்கே புகுத்தியவள்
வள்ளற் கேழுதக வெல்லளம் சொல்லாய் வகுத்துரைக் கேன்
அள்ளற் பழனப் புதுவைத் திருத்தணி ஆளாகின்றாள்
கொள்ளற் குரிய வெலாம்தந்து காக்கும் கொடைச் செல்வியே (37)

சதுவைக் கொருமளை யாக்கி நெருப்பிடும் தன்மைபெற
மதுவைப் பருகும் மயக்கால் மனித்த வகையினில்யாம்
விதுவைக் கொருமுகப் பெண்டிர் முயக்கிவ் விழுந்தழிந்தேம்
புதுவைத் தலைவி புவனேசி பூம்பதம் போந்துய்வமே (38)

அவதி யறியா வினைப்பாரம் சென்னி யழுத்துவதைப்
புவனி பிறந்ததும் தேருத பேதை புவனவல்லி
தவனு நெறியு மனமதியும் பூண்டெழு சாந்தமுனி
பவனி புரிவிக்கக் கொள்ளா மகிழ்ச்சியைப் பார்த்துன்யுமே (39)

விருப்பு வெறுப்பற்ற வேதாந்த வல்லி விமலைசியை
கரும்பு மருவாது ஞாலத்தைக் காக்கும் கருணைவல்லி
பொருப்பு வளைத்தவள் போற்றும் புதுவைப் புவனவல்லி
இரும்பு சதாசிவ ஞானிய திட்டானம் எண்பதுண்டே (40)

தேங்கும் புகழ்த்தமிழ்த் தேவாரம் கொண்ட சிவபெருமான்
ஓங்கும் சுருதியினுட் பொருளீ தென் றுணர்த்து மென்ப
வீங்கும் தமிழ்மறை யாரிய வேதம் விளம்புபொருள்
தாங்கும் புவனேசி யென்றே புகலுவர் சாத்தர்களே (41)

பிரம்ம பொருளொன்று பேச்சுக் கடங்காப் பெருமையது
பரமப் பொருளென்று பாரும் பழமறைப் பாட்டினுள்ளே
உரமிப் பொருளென்று தொண்டர் குழுவிலுறும் பெரியர்
பரமப் பொருளாப் புவனேசி தத்துவம் பார்ப்பதுண்டே (42)

கண்ணே கருத்தே கனியப் பிறந்த கவிதையுளே
வின்ணே யடங்கும் புவியும் ஒருங்கும் விரிமறையிள்
கண்ணே மறையும் பொருளாம் புகுந்து கவின்விளக்கும்
பெண்ணே யுருவாம் புவனேசி தத்துவப் பேச்சுதினே (43)

பொற்கலை செப்புக்கலை கல்லின் பூங்கலைப் பொற்பதிவாள்
சொற்கலை யாயகவி தைக்கலையின் சுவை தெளிவாள்
நற்கலை யோவியத் துள்ளாம் புகுந்து நடிப்பவள்காண்
சிற்கலை நல்கும் குருவாம் புவனேசி தேவதையே (44)

கொண்டா ளெனவொரு கோமானை வேண்டாத கோமானைகாண்
கண்டா னுரைத்தாள் எவனோ வொருவள் கருத்தகத்தே
பெண்டா ளிவளென்று பேசினள் யாரிவர் பெட்பறிந்தார்
மண்டாள் வணங்கப் புதுவை நகரம் மகிழ்ந்தனனே (45)

கூறா தவறில்லை கூறினா ரில்லை குலக்கொடியைத்
தேறா தவறில்லை தேறின ரில்லை செகதலத்தே
பேராக வேண்டுநர் கொள்ளத் தனையே பிணிப்பவளே
மாறாத வாழ்க்கைப் புவனேசி வாழ்வன் மனத்தளியே (46)

சொல் லோவியமோ பொரு ளோவிய மோதுணிபரிய
கல் லோவியமோ கிழியோ வியமோ கனகமய
நல் லோவியமோ புருவா ளெனினும் நமக்கருளும்
எல் லோவியமாய் புவனேசி எங்கும் இருப்பவளே (47)

தேடிப் பெருஞ்செல்வம் நில்லாத தென்பர் தேனிஞர்களே
தேடிப் பெறுதற் கரும்பெருஞ் செல்வம் திசைகள்பத்தும்
நாடிப் பெறுதற்குரிய வருட்செல்வம் நல்குமவள்
கோடிப் புவனங்கள் ஆண்ட புவனேசி ருங்குமையே (48)

அன்னே யெனவே யழைக்கும் குழவிக் கருள்சிறப்பு
பின்னே யனைய சிறுவாழ்வின் மங்கைக்கும் மேவுவதே
அன்னே யெனாமுன் அகிலேச போகம் அளித்தளேப்
பெண்ணே பணியும் புவனேசி நெஞ்சிற் பொலிகுணமே (49)

நீயாரை யாண்டுனை நின்செயல் யாவை நிகழ்த்துகென
வரயாய் வினவி மறுமொழி பெற்ற மனித்தரிலை
ஓயாத மெய்த்தவம் பூண்டே மனத்தால் உணர்பவரை
நீயான் புவனேசி யென்பது மெய்யாம் நிலத்தினிலே (50)

எங்கோ கிடந்த சிலையைக் கொணர்ந்தே எழிற்கலையிற்
பொங்கோ வியமாய்ப் பெருஞ்சிற் பமாகப் பொலிய வைத்துச்
சங்கோ லிடப்பல வாச்சியம் பேசத் தழையருளாற்
பொங்கோ ரருஒரு வன்மே புவனேசி பொற்புருவே (51)

மணக்கும் மலர்களை நெஞ்சோ டணியும் மனித்தர்முளம்
தணக்கும் கருத்தறத் தானெதிர் நிற்கும் தயாவுவேம்
கணக்கும் நீரால் உவந்தாரும் கோமளை கண்ணருளை
இணக்கும் தனியிற் புவனேசி வாழ்வ தியற்கையன்றே (52)

கும்பா பிடேகம் உலகருக் கென்றே கொளுமிறைவி
சும்பா நிசும்பா மயிடா பணிகெனச் சொற்றசிலை
அம்பா வருள்கெனு மாமுவி வோரை யறிசெயலாள்
எம்பா லருள்கொண்டு சீ புவ னேசி யெனப்பெறுமே (53)

அன்னாய் திருவருட் செல்வந் தருகென்ற மார்பினாள்
முன்னாள் வணங்குமுன் மெய்ப்பொருள் நாவால் முழங்கினையே
பின்னாள் முனிவரும் போற்றினர் வேண்டிய பேறுபெற்றார்
பொன்னாள் வணங்கப் பெறும் புவனேசி பொருவிலியே (54)

சீலம் சிறந்த புரவலர் செய்தார் திருப்பணியை
ஞாலம் புரண்டு நிருபர் மரபின்றி நாடுநிற்க
ஏலம் பிறங்கு குழற்புவ னேசுரி எம்மனைதான்
காலம் கடந்தது காட்டுகின்றாள் இன்று காண்மின்களே (55)

பூவாரம் சூட்டுவர் பொன்னாரம் வேய்வர் பொருளுடையார்
பாவாரம் சூட்டும் பணியைப் புரிவர் பனுவலரே
தேவாரம் பாடித் திருவாச மும்செவிக் கிசைத்து
நாவார நின்னைப் புகழ்வர் புவனேசி நாவலரே (56)

சான்றோனா யாண்டவள் சாந்த முனிவர் தயமிதிப்பள்
தோன்றாத மெய்த்துணை யாவுளம் தோன்றுவன் சொல்லரிய
தேன்றாழ் மொழிகளிற் றத்துவ போதம் தெளியும்வணம்
யான்றா ளதுவென்று தேற்றும் புவனேசி எம்மனையே (57)

உடலுள் ளடங்கும் உறுப்பே யுணரா துலகினிடை
மிடலுள் மிகுந்தேம் எனப்புகல் மானிட வித்தகரைக்
கடலுள் விழுந்த கலத்தரைக் கண்ணின் கருணையினால்
தொடலுள் இறங்கும் புவனேசி கால்கரம் தூய்மையே (58)

சொன்னால் விரோத மெழுமெனும் சொல்லத் துணிந்தவரைப்
பன்னாளும் தேடி மனத்துட் பதித்த பரம்பொருளை
மன்னாத வாழ்வின் மனித்தருக் கென்றே வழங்குநரை
மின்னாம் உருவப் புவனேசி காப்பது மெய்ம்மையன்றே (59)

சாந்தம் விழைந்தே தயையைப் பயின்றிலர் தாட்சணியம்
தாந்தம் தெளிந்திலர் சந்தம் விளங்கும் தமிழ்த்தொடையை
மாந்தர் மகிழப் புவனேசி கேட்க வழுத்திலரே
ஏந்தல் எனவே யிருந்தென்னை போயென்னை இன்னவரே (60)

மன்னாதி மன்னர் மரபு மறைந்தும் மகியுளதே
பொன்னா லுயர்ந்த பலர் மடிந்தாலும் புவிசிறக்கும்
மின்னா லொளிர்மேனி யன்னை புவனேசி மெய்யருளின்
மன்னாத வாழ்வு முளதோ வுலகின் மனித்தருக்கே (61)

சொல் வந்தனை தாளெளிதன்று தேவி துணையடிக்கே
நெல் வந்தனை செய்வர் சில்லோர்புனல் பால்நிரைமதுவால்
நல் வந்தனை செய்வர் சிற்சிலர் வேதாந்த ஞானியரோ
வெல்வந்தனை யார்புவ னேசிநாமம் விளங்க வென்றே (62)

பாரின்பம் வேண்டிப் படருநெஞ்சே பழம்பாடலிலே
ஓரின்பம் சிற்றின்ப மென்பது மேனைய தொப்பிலதாம்
பேரின்ப மென்பதும் பேசிய தோர்ந்திய பேதமையால்
சீ ரின்பம் வேண்டிற் புவனேசி பாதத்திற் சேர்திகென்றே (63)

அல்லற் கடலிற் சுழல்வாளாக் கண்டும் அகந்தையினாற்
செல்லக் கடலிற் நிணைக்கின்ற புல்லியர் தேவியளே
புல்லக் கருதிப் புவனேசி நாமம் புகழ்வதுண்டே
மல்லற் பிறப்பே மறுவலும் வேண்டும் மனத்தினன்றே (64)

முன்னைப் பிறப்பினிற் பண்ணிய புண்ணியம் முத்தமணி
தன்னைப் பவளத்தை மாணிக்கம் தன்னையும் தந்துளதே
பின்னைப் பிறவி நலம்பெற வேண்டிற் பெரும்புவனத்
தன்னைக் கவற்றிளை யர்ப்பணம் செய்தல் அழகிதன்றே (65)

புலமை படைத்தது முன்னைப் பிறப்பியம் புண்ணியத்தால்
தலைமை யமைந்தது தேவி புவனேசி தன்னருளால்
நிலைமை யழியாத வாழ்வுற வேண்டும் நினைப்புளதேல்
கலைமை யனைத்து மவட்கே யெனக்கையிற் காட்டுமினே (66)

யாரே யறிந்தவர் வேதத்தி னுட்பொருள் இன்னதென
யாரே யளந்தவர் கோடானு கோடியி யதுலகை
யாரே தெளிந்தவர் ஞானத்தி னெல்லையிருப் பதெனவே
யாரே துணிந்தவர் தேவி புவனேசி இன்னருளே (67)

பிறந்தார் வளர்ந்தார் பொருள்தேடி வாழ்ந்தார் பிறகுமடிந்
திறந்தார் எனவே வரலாறு கேட்பதில் என்னைபயன்
துறந்தார் உலகத்தை வாழ்வினை யெய்தினர் சோர்விப்பதம்
சிறந்தார் புவனேசி மெய்யருள் பூண்டெடன்ப தேர்ந்தவரோ (68)

அல்லோல கல்லோல மாகியும் வாழ்க்கை யகம்விழைவிற்று
எல்லோரும் வரமுவம் நாளைக்குமர் நன்றே யெனநினைப்பார்
ஒல்லோதை மேவும் கடலே விழுங்கும் ஒழுக்கத்திலும்
மெல்லோசை யாளே புவனேசி பாதம் விழைகலரே (69)

நம்பனை நம்பியை நாயக னென்றே நடத்தவலாள்
கம்பனை முன்பு தமிழ்க்கவி யாக்கிக் களிக்குமவள்
கொம்பனை யாளொரு கோடியுலகத்தும் கோல்செலுத்தும்
செம்பொரி ஒளிகொள் புவனேசி பூம்பதம் சிந்திப்பரே (70)

அருளாழி யென்கோ அறிவாழி யென்கோ அளப்பரிய
பொருளாழி யென்கோ புகழாழி யென்கோ பொருவிலதாம்
தெருளாழி யென்கோ திறவாழி யென்கோ செகம்புரக்க
உருளாழி யென்கோ புவனேசி பாத உபயத்தையே (71)

செந்தா மரையுரை தேவியும் வெண்மலர்ச் செல்வியுமாய்
வந்தாரை வாழ்விக்க மாமேரு வுச்சி வதிபவளாய்
இந்தாரு மண்டல மாலய மென்றுளத் தேற்றவளைச்
சந்தாரு தோட்புவ னேசுரி யென்பவர் சாத்தர்களே (72)

கொல்லாமை வேண்டும் மறையாற் வேள்வியிற் சொல்வதுண்டு
வெல்லாமை வேண்டி யடங்கினர் தம்மனம் வென்றதுண்டு
நில்லாமை நீங்கி நிலையான வாழ்வு நியக்கவலார்
சொல்லாமை யுண்டோ புவனேசி சோத்துச் சுருதியையே (73)

இருபாற் பிரளயம் சேரோ ரெழுத்திள் இடையிலங்கும்
அருளாற் பெரிய புவனேசி மெய்யுருவாய் வதுண்டேல்
உருவாற் பெரிய வருவாற் பெரிய வொருமையென
மருவாற் பெரிய குழலாளை யேத்தி வழுத்துமினே (74)

வேதாந்த சித்தாந்த மோதித் தெளிந்த விபுதகணம்
நாதாந்த மென்மரும் மோதாந்த மென்பரும் ஞானமய
போதாந்த மென்மரும் தொண்டைப் புதுவைப் புவனவல்லி
பாதாந்த மென்மரும் ஆயினரே யிந்தப் பாரகத்தே (75)

காணக் கிடையாத செல்வ மெளிதிற் கரதலத்தே
பேணக் கிடைத்து மதன்மரண் பறியாத பித்தரென
மாணக் கிடைத்த புதுவைப் புவனேசி மாண்பனைத்தும்
பூணக் கிடையாத நெஞ்சத்தை யெல்லனம் போற்றுவதே (76)

தொல்லோர் உரைத்த பனுவற் பரலை துளைந்தெழுந்தும்
எல்லோர் விளக்கிய பத்திக் கடலில் இடைவிழுந்தும்
நல்லோர் தெளிவித்த ஞானத்தின் வாரிதி நன்களைந்தும்
செல்லோர் புவனை திருக்கோயில் என்காண்பர் சித்தத்திலே (77)

யானே யினிநின்னை வேண்டுவ தில்லை யிரைவியளைத்
தானே நிணாது பணிக்காக வென்று சமைத்தனைகாண்
வானே நிலனே மறந்தாலும் நின்னருள் வாழ்த்து மனம்
தேனே யனைய புவனேசி நல்கவிச் சென்மத்திலே (78)

முன்னே பிறந்த பிறப்போ கணக்கிலை முக்தனியாள்
இன்னே பிறந்த பிறவிக் குறைகளை என்னுணர்வேன்
பின்னே பிறப்பு வருமோ வெனநெஞ்சு பேதுறுமே
அன்னே புவனே யளியேன் மனத்துய ராற்றுதியே (79)

செங்கல் கருங்கல் அடுக்கி மனைப்பணி செய்குநரும்
செங்கல் பசுங்கல் செதுக்கினர் பொற்பணி செய்பவரும்
பொங்கல் மதுப்பால் மலரோடு வந்து புவனவல்லி
திங்கள் முகநோக்கிப் பாதம் இறைஞ்சினர் செல்வதுண்டே (80)

செக்கர்ச் சிவந்த திருமேனி கொண்டருள் தேவதையை
பக்கத்தில் வந்துன் பதமலர் பூசிக்கும் பான்மையினை
மைக்கட் கருங்குழல் நாமகள் பூமகள் வாய்த்தனர்காண்
மக்கட் கருளக்கொல் வந்தாய் புதுக்கோட்டை மநாகர்க்கே (81)

விழலுக் கிறைத்த புனலாக வாழ்க்கை வெறிதுசெல
அழலுக்கும் நீருக்கு மஞ்சிப் பகைக்கும் அதிர்பவராய்
உழலுக் கியையாது சோம்பித் திரியும் உலகர்தமைக்
கழலுக் கடியவர் ஆக்கும் புவனை கருணையென்னே (82)

எண்ணும் எழுத்தும் பழுதறக் கற்ற சினத்தினரும்
கண்ணும் கருத்தும் புவனேசி தெய்விகக் காட்சிபெறப்
பண்ணும் பணியில் இறங்கிலர் அந்தோ பலவகையில்
நண்ணும் பொருளே பெரிதாக வெண்ணி நடந்தனரே (83)

திருமாலைப் போற்றுவர் பூமகள் பாதமும் சேவிப்பரே
கருமால் கழற்றும் சிவத்தைச் சிலையைக் கருதுவரே
வருமால் புவனேசி யெல்லாரு மாகும்வகை தெளியார்
உருமால் சுழற்றத் திருமாலை யேசுவர் ஓர்சிலரே (84)

கையுண்டு காலுண்டு காதுண்டு நெஞ்சுட் கரந்தருளும்
மெய்யுண்டு தெய்வப் புவனேசி யென்ற வியன்பெயரால்
நெய்யுண்டு பாலுண்டு தேனுண்டு கோயிலும் நேரிலுண்டு
பொய்யுண்டு மானிடப் பூண்டுலகத்திற் புறப்படுமே (85)

எய்யார் பொருள்கோடி எய்தும் பொருளோ இரண்டொன்றென
மெய்யாப் புகன்ற புலவோர் திருவுள்ளம் மேதினியிற்
செய்யாத் தருமத்தர் செய்சென் றுரைக்கும் திருமொழியே
பொய்யாப் பொழிந்த தேனினும் புவனை பொறுப்பளன்றே (86)

கையைக் குவித்திரு காலையும் பற்றிக் கசடர்முளம்
மெய்யைச் சிதைவித்துப் பொய்யினைப் பேசி விழுமனிதர்
மையைக் குளிர்வித்து மண்ணைச் செழிப்பிக்கு மாதரசி
கையைக் கழலை நினைந்து புவனே கலுழ்கலரே (87)

அறியார் அறிவார் அவளை அறிந்தார் அறிகிலரே
செறியார் செறிவார் சிலையைப் புவனையைச் சிக்கறவே
நெறியால் நடந்து புதுவைத் திருத்தலம் நேர்வருவாகி
வறியார் எனினும் பெருஞ்செல்வ ரென்பது வாய்மையன்றே (88)

உலகத்தர் பேசும் புகழ்க்கே விழைவுற் றுழலுநெஞ்சே
கலகத்தர் மாயத்தர் நெஞ்சத் திருப்பன கண்டனையோ
பலகற்ற நல்லோரைப் பேணார் சிலகற்ற பாக்கியரை
அலகற்ற பேரில் அழைப்பர் புவனை அறிவளன்றே (89)

தேற்றக் கருதிற் புவனேசி மான்மியம் தேற்றுகவே
சாற்றக் கருதிற் புவனேசி நாமங்கள் சாற்றுகவே
ஆற்றக் கருதிற் புவனேசி நற்பணி ஆற்றுகவே
மாற்றக் கருதிற் பணியாத நெஞ்சத்தை மாற்றுகவே (90)

ஒருநா ளொருபொ முதுள்ளத்து னோக்கி யுருகவிலை
திருநாள் பலநாள் பலரோடு கூடிச் செழிப்பதுண்டு
வருநாள் எலுவரு மென்பது தேரு மனித்தரினப்
பெருநாள் புவனேசி பாதம் பிடிக்கப் பெறுவதுவே (91)2

பாதாதி கேசமும் கேசாதி பாதமும் பார்த்துநின்று
வேதாதி வாக்கியம் நெஞ்சோ ருரைத்து வியந்துநின்று
பூதாதி கூடிப் பிறக்கும் பிறவிப் போக்கெனவே
நாதாதி யாரும் புவனேசி பாதம் நணுகனன்றே (92)

சந்தோகர் சாமம் தகவே யிடைப்பது தானறிவள்
வந்தோர் தமிழ்மறை பாடலும் கேட்டு மகிழ்வுறுவள்
நொந்தோர் உரைக்கும் உரைகளும் கேட்டு நொடியளவில்
சந்தோட மாக்குவேன் தானே புவனேசி தாய்மையிளே (93)

மறைமூன் றிசைத்து வழிபடுவாரை வளர் தமிழின்
மறைநான் கிசைத்து வணங்கு மினத்தை மசிதலத்தே
சிறையூன்று கன்மங்கள் போக்கி யருளும் செயலுடையாள்
பிறைதோற்று வெற்றிப் புவனேசி வியந்துணர் பேதைநெஞ்சே (94)

கோடானு கோடி யுலகங்கள் காக்கும் குடித்தலைவி
ஏடாற யாரும் எழுதற் கியலா இயல்புடையாள்
வாடாத நெஞ்சமும் மாயாத செல்வமும் வாய்த்திருந்தும்
தேடாத செல்வரைத் தேடிப் புவனேசி சேர்வதுண்டே (95)

பரிந்தே மலந்தே மெனச் சொலித்தேவி பதமலரிற்
சொரிந்தே மலர்களை வெற்பாக்கு மெய்யன்பர் துக்கமெலாம்
இரிந்தே யொழிவது சத்தியம் சத்தியம் என்பதனைத்
தெரிந்தே யலவோ புவனேசி பாதங்கள் சேவிப்பதே (96)

வறுமை யொழிக் கெனவேண்டின நின்னை வழுத்திலம்யாம்
சிறுமை தவிர்க்கென நின்றுரு நெஞ்சுறச் சித்தித்திலெம்
பொறுமை யருள்கென வன்னை புவனேசி போற்றுகின்றோம்
மறுமை தவிர்த்தருள் செய்தி யெனநின்று வாழ்த்துவமே (97)

நோயே யுடம்பென்று செந்நாப் புலவர் நுவல்வதுண்டு
பேயே பிடித்த மகளிரைப் போலயாம் பேதுறிறும்
தாயே நினது தயாவினை வேண்டித் தணிகிலமே
நீயே யருள்கூர் புவனேசி வேறென் னிகழ்த்துவதே (98)

எத்தனை நோய்கள் உடலுட் புகுந்தே எமைவருத்தும்
அத்தனை நோய்க்கும் மருந்தா நின்பெயர் ஆவளவே
பத்தனை வாட்டும் பருவரல் போக்கும் பரங்கருணை
இத்தனை யுண்டு புவனேசி பாலென எய்தவமே (99)

கோலோச்சு மன்னர் குடிக்க ளழிந்து குடியரசு
வேலோச்சி வில்லேந்தி மேலோங்கு நிற்கும் வினையறிந்து
காலோச்சி யாரும் பிரானை நின்ருட்டும் கருணைவல்லி
மாலோச்சி யாளும் புவனேசி பாதம் மறந்தனரே (100)

வெறுப்பார் வெறுக்க இகழ்வார் இகழ்க மிகச்சினந்தே
ஒறுப்பார் ஒறுக்க புவனேசி பாதம் உறுதுணையென்
றிறுப்பாம் உலகிடை யெவ்வகைத் துன்புக்கு மிடழியெப்
பொறுப்பாம் அவனருள் பூண்பாம் சிரமிசைப் பொற்றறவே (101)

செம்மை பொலியத் திகழும் திருமேனிச் செல்வியினை
இம்மை மறுமை யருளினள் வீட்டையும் ஈபவளை
அம்மை புவனேசி யென்றே யடைந்தார் புவனவெலை
உம்மை படிதலும் நீர்தலும் தோய்தலும் உள்ளதன்றே (102)

நாவா லியலாது தேவிதிருப் பேர் நவிற் றுதற்கும்
பூவால் இயலாது தாயின் திருமேனி போர்த்துதற்குப்
பாவால் இயலாது சீ புவனேசி பதம் பரவ
ஆலா பிறந்தோம் வளர்ந்தோம் திரிந்தோம் அவனியிலே (103)

நெஞ்சால் நினைவதும் நாவால் இசைப்பதும் நேயமுறப்
பஞ்சா மிருதம் பயம்புனல் தெல்சிற் பயிலிளநீர்
அஞ்சாறு நற்கனிச் சாறு புவனேசி அன்புருவிற்
கெஞ்சா தபிடேகம் செய்வது மாந்தர் இதம்பெறவே (104)

மனையாட்டி யென்று நினைந்திட நல்கும யேச்சுரனும்
எனையாட்டி வைப்பாள் எழிலார் புவனேசி என்பதுண்டே
வினையாட்டி வைத்த விதமே நடக்கின்ற மெல்லியரேம்
நினையாட்டி லன்னா அருள்கென வேண்டாது நிற்பதுண்டே (105)

மாமேரு போல மலனாச் சொரிந்து வணங்குறகும்
மாமேரு வுச்சியிற் குங்கும மிட்டு வணங்குறகும்
மாமேரு தன்னிலு மேலாக மேதினி வாழ்வுபெற
மாமேரு வாழும் புவனேசி பாத மலருளவே (106)

தேவேசி மேருச் சிகரத் துறையும் திருவடியாள்
ஆவேசி யாசி அடியார் மனத்தே அவதரிப்பாள்
நாவேசி யாகப் பிறவிக் கடலில் நமைநடத்தித்
தாவேசி யாகச் சமுசார தாகம் தணிப்பவளே (107)

வாழ்த்திய வாயை நினைக்கின்ற நெஞ்சினை வாழவைப்பாள்
தாழ்த்திய சென்னியைத் தன்பதத் தாமரை சாரவைப்பாள்
வீழ்த்திய பொல்லா வினையாளர் நெஞ்சில் விளங்குறுவாள்
ஊழ்த்திற மாற்றியருள்வாள் புவனேசி யுத்தமியே (108)

## வாழ்த்து

வாழிய தொண்டைப் புதுவைப் புவனேசி வண்கழல்கள்
வாழிய சீ புனேசுரி பாத மலர் பணிவார்
வாழிய தேவி புவனேசி தொண்டில் மகளிரினம்
வாழிய தேவி யலங்கார மென்றே வரும் கவியே

# துணைநூற்பட்டியல்


| | | |
|---|---|---|
| 1. | சண்முகசுந்தரம், சு. | தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள்,<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>சென்னை, 1995. |
| 2. | சுப்பிரமணியன், ச.வே.<br>மற்றும் விஜயலட்சுமி. ர.,<br>(பதி), | தமிழ் இலக்கியக் கொள்கை<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,<br>தரமணி, சென்னை, 1981. |
| 3. | இரங்கசாமி முதலியார்,<br>அ(பதி), | அரிச்சந்திரன் கும்மி,<br>பூமகள் விலாசம் பிரஸ்,<br>சென்னை, 1935. |
| 4. | த. இராசாராம், | தமிழில் அம்மானைப் பாடல்கள்,<br>கேரளப் பல்கலைக்கழகம்,<br>வெளியீடு. |
| 5. | ச.வே. சுப்பிரமணியன், | தமிழ் இலக்கிய வகையும் வடிவும்,<br>தமிழ்ப்பதிப்பகம்,<br>சென்னை, 1984. |
| 6. | உ.வே. சாமிநாதய்யர் | என் சரித்திரம்<br>உ.வே. சா. நூல்நிலையம்,<br>பெசண்ட் நகர். சென்னை,<br>60009, 2008. |
| 7. | பூ. சுப்பிரமணியம் | சுவடியியல்,<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை-113 |
| 8. | முனைவர் தி.மகாலட்சுமி,<br>முனைவர்<br>சு.ப. வித்யாதரன் (பதி) | சுவடியியல் ஆய்வு<br>ஸ்தபதி பதிப்பகம்,<br>தியாகராயநகர், சென்னை - 1 |

9. சுப்பிரமணிய செட்டியார், அரிச்சந்திரன் கொம்மி, திருமகள் விலாச அச்சுக்கூடம், 1875

10. அனுமந்தராயன் (பதி) அரிச்சந்திரன் கும்மி, பட்டய ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், 2004.

11. மொ. மருதமுத்து (பதி) புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 113, 1995.

12. மா, சு. சம்பந்தன், அச்சும் பதிப்பும், மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை, சென்னை - 108. 1997.

13. எஸ். இராமகிருஷ்ணன், புத்தகத்தின் கதை, பண்புப் புத்தக வெளியீடு, 1960.

14. த.கோ. பரமசிவம் (பதி) சுவடிப் பதிப்பு நெறிமுறைகள், (கருத்தரங்கக் கட்டுரைகள்) தஞ்சாவூர் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1989

15. நர்மதாவின் தமிழ் அகராதி, நர்மதா பதிப்பகம், தியாகராய நகர், சென்னை - 17.

16. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மூவருட தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை, தொகுதி - 12, பகுதி - 2, சென்னை, 1961.

# செய்யுள் முதற் குறிப்பகர நிரல்
## புவனேசுவரி அலங்காரம்

# இ. சொல்லடைவு

## 1. இயற்கைப் பெயர்கள்

| | |
|---|---|
| அண்டம் | - கும்மி 91 |
| கடல் | - கும்மி 62 |
| காற்று | - கும்மி 57 |
| குகை | - கும்மி 103 |
| ஞாலம் | - அலங் 16 |
| நிலம் | - கும்மி 57 |
| நீர் | - கும்மி 57 |
| நெகிழி | - கும்மி 40 |
| நெருப்பு | - கும்மி 40 |
| | கும்மி 57 |
| புனல் | - அலங் 62 |
| பூக்கள் | - கும்மி 59 |
| பூமி | - கும்மி 71 |
| மலை | - கும்மி 57 |
| மின்னல் | - கும்மி 80 |
| மேருமலை | - கும்மி 98 |
| விண் | - கும்மி 57 |

## உணவுப் பெயர்கள்

| | |
|---|---|
| அரிசி | - கும்மி 58 |
| அமுது | - அலங். காப்பு |
| அமிர்தம் | - கும்மி 26 |
| எள் | - கும்மி 7 |
| கரும்பு | - அலங். 40 |
| கனிச்சாறு | - அலங் 104 |
| கீரை | - கும்மி 17 |
| கூழ் | - கும்மி 63 |

| | |
|---|---|
| சப்பரம் | - கும்மி 26 |
| நெய் | - கும்மி 7 |
| | கும்மி 60 |
| நொய்யசிரி | - கும்மி 63 |
| பஞ்சாமிர்தம் | - கும்மி 104 |
| பால் | - கும்மி 60 |
| பொங்கல் | - அலங் 80 |
| மது | - அலங் 38 |

**மலர்களின் பெயர்கள்**

| | |
|---|---|
| அரும் | - கும்மி 76 |
| சம்பங்கி | - கும்மி 43 |
| சண்பகம் | - கும்மி 43 |
| தவனம் | - கும்மி 43 |
| தாமரை | - கும்மி 43 |
| தாழை | - கும்மி 89 |
| மல்லிகை | - கும்மி 89 |
| மல்லிலை | - கும்மி 43 |
| மலர் மாலை | - அம்மானை 2 |
| முல்லை | - கும்மி 43 |
| போது மலர் | - கும்மி 76 |

**ஆண்பாற் பெயர்கள்**

| | |
|---|---|
| ஆண் | - அலங் 47 |
| எமன் | - கும்மி 38 |
| ஞானி | - கும்மி 55 |
| கண்ணன் | - கும்மி 37 |
| கம்பன் | - அலங் 70 |
| காமன் | - கும்மி 81 |
| கோமான் | - அலங் 45 |
| சதாசிவ | - அலங் 40 |

சித்தர் - கும்மி 82
சிறுவர் - கும்மி 83
சிவபெருமான் - அலங் 41
செல்வன் - கும்மி 61
சேவகன் - கும்மி 38
திருமால் - அலங் 84
தேவர் - கும்மி 83
பாண்டவர் - அம்மானை 5
புதல்வர் - கும்மி 84
பேதை - கும்மி 73
மன்னர் - அலங் 100
மாணிக்கவாசகன் - அம்மானை (காப்பு)
முனிவர் - கும்மி 82
மேதை - கும்மி 73
ராபனன் - கும்மி 95
வறியவன் - கும்மி 61

**பெண்பாற் பெயர்கள்**

எழிலரசி - அலங் 17
எளியவள் - கும்மி 35
கண்மணி - அம்மானை 1
கருணைவல்லி - அலங் 40
குழலாள் - அலங் 74
கௌரி - கும்மி 37
சௌரி - கும்மி 37
திருமகள் - கும்மி 53
தேவதை - அலங்க 81
தேவி - கும்மி 12
அம்மானை 6
தையலர் - கும்மி 50
நாயகி - கும்மி 38

| | | |
|---|---|---|
| பாவியர் | - | கும்மி 35 |
| புவனேசி | - | அலங் 28 |
| பெண் | - | அலங் 4 |
| பெண்டிர் | - | அலங் 38 |
| | | அம்மானை 7 |
| பெண்மணி | - | அம்மானை 1 |
| மங்கையர் | - | அலங் 29 |
| மதுரவல்லி | - | அலங் 7 |
| மாதரசி | - | அம்மானை 6 |
| மேகலை | - | அலங் 22 |
| யோகினி | - | கும்பி 93 |
| வாணி | - | கும்மி 37 |

**கிழமைப்பெயர்கள்**

ஞாயிறு
திங்கள்
செவ்வாய்
புதன்
வியாழன்
வெள்ளி
சனி
— கும்மி 39

**விலங்குப் பெயர்கள்**

| | | |
|---|---|---|
| ஞமலி | - | கும்மி 38 |
| எகினம் | - | கும்மி 40 |
| சிங்கம் | - | கும்மி 38 |
| நாய் | - | கும்மி 65 |
| பூனை | - | கும்மி 38 |
| மயில் | - | கும்மி 40 |
| கிளி | - | கும்மி 16 |
| மீன் | - | அலங் 12 |
| வெளவால் | - | கும்மி 103 |

## இடப்பெயர்கள்

உலகம் - அம்மானை 3
கபிலை - அலங் 13
கோயில் - கும்மி 10
சிறுகுடில் - அலங் 37
திருமலை - அலங் 12
மாலிகை - அலங். பயன்
வீடு - கும்மி 99

## உணவுப் பெயர்கள்

தேன்
ஊன் - கும்மி 49

## உலோகப் பெயர்கள்

இரும்பு - அலங் 40
கெம்பு - கும்மி 20
கோமேதகம் - கும்மி 20
செம்பு - கும்மி 75
பொன் - கும்மி 75
மாணிக்கம் - கும்மி 20
வச்சிரம் - கும்மி 20
வெள்ளி - கும்மி 75

## உறுப்புகளின் பெயர்கள்

இதயம் - கும்மி 34
கண் - அலங் 5
கருங்குழல் - அலங் 81
கால் - அலங் 84
கும்மி 62
காது - அலங் 84
கை - அலங் 84

| | |
|---|---|
| | கும்மி 62 |
| | கும்மி 34 |
| செவி | - அலங் 5 |
| நகம் | - அலங் 19 |
| நாக்கு | - கும்மி 62 |
| மலர்ப்பதம் | - கும்மி 3 |
| விழி | - கும்மி 4 |
| விரல் | - அலங் 19 |

**உறவுமுறைப் பெயர்கள்**

| | |
|---|---|
| தந்தை<br>தாய் | கும்மி 42 |

**குணப்பெயர்கள்**

| | |
|---|---|
| ஆர்வம் | - கும்மி 36 |
| இன்பம் | - கும்மி 46 |
| காம | - கும்மி 45 |
| குரோதம் | - கும்மி 45 |
| சுறுசுறுப்பு | - கும்மி 36 |
| சோர்வு | - கும்மி 36 |
| துன்பம் | - கும்மி 46 |

| | |
|---|---|
| தூய் மை<br>வாய்மை | கும்மி 48 |

**அணிகலன் பெயர்கள்**

| | |
|---|---|
| கழல் | - கும்மி 70 |
| பூவாரம்<br>பொன்னாரம் | அலங் 56 |

## வழிபாட்டுப் பெயர்கள்

அர்ச்சனை - கும்மி 59
யுக்தி - கும்மி 92
யோகம்

## ஊர்ப்பெயர்கள்

திருத்தணி - கும்மி 86
புதுவை - அம்மானை 9
புதுக்கோட்டை - அலங் 81

## திசைப்பெயர்கள்

தெற்கு
வடக்கு
குணக்கு
குடக்கு
] கும்மி 48

## கருவிப்பெயர்கள்

ஏர் - கும்மி 8
கதவு - கும்மி 64
கருங்கல் - அலங் 80
சுழல்வாள் - அலங் 64
செங்கல் - அலங் 80
பசுங்கல் - அலங் 80
வில் - அலங் 11
விளக்கு - அலங் 9

## ஈ. பின்னிணைப்பு




16.7.2011 அன்று தினகரன் நாளிதழில் வெளியானது

T.7226



புவனங்கள் அனைத்திற்கும் ஈசுவரி. ஈசன்,
திருமாலைப் போல் மணித்வீபம் எனும்
அகில உலகங்களுக்கும் மேலானவளாய் தரும் காட்சி



பாச அங்குசத்துடன் சித்தர்கள் சூழ புவனேசுவரி



வடைமாலை அலங்காரம்



எலுமிச்சை மாலை அலங்காரம்




மாதா புவனேசுவரி

T. 7226



T. 7226 சந்தனக் காப்பு அலங்காரம்

Gomcru
Ch. 5

